உ

குமரன் றுணை.

# கருவூரார் நொண்டி

என்னும்

## வாதகாவியம்—எ௱.

இஃது

நீலகிரி மலையடிவாரம் மேட்டுப்பாளையம்

குகைவாசம்

**பால் சாமியா ரவர்களால்**

பரிசோதிக்கப் பெற்று,

மதுரை புதுமண்டபம் புஸ்தகஷாப்

இ. ராம.

## குருசாமிக் கோனர்

அவர்களாற் றமது.

மதுரை வடக்கு மாசி வீதி

ஸ்ரீ ராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப் பெற்றது.

இதன் விலை ] **1931** [ ரூ 1-8-0



உ

பரமபதி துணை.

# கருவூரார் நொண்டி

என்னும்

# கருவூரார் வாதகாவியம். 700.

## விநாகர் காப்பு.

சித்தி தந்த சிறந்த விநாயகன்
பத்தி தந்திடப் பாதம் பணிந்துயான்
நத்தி யிந்த நவில்காவி யஞ்சொல
முத்தி தந்த முதல்வனைப் போற்றுவாம்.

போற்று கின்ற கருவூரான் வாக்கிது
ஏற்ற மானதோர் கற்ப முறைகளிற்
சிற்ற முள்ளநற் சித்தர்கள் மெச்சிட
மாற்ற லான வகைதனைச் சொல்லுவேன்.

சொல்லு வேன்பல சந்தத் துடனிது
வல்ல வாத வயித்திய நொண்டியாய்
எல்ல வர்களும் பாடிப் படித்திட
நல்ல நாளினில் நானிதைப் பாடுவேன்.

பாடு வேன்பல சந்தத்தின் சிந்ததாய்
நாடு வேனினி நற்குரு பாதத்தைத்
தேடு வேனினி சிந்தை மகிழ்வொடு
கூடு வேன்குரு போகர்தன் பாதமே.

## காப்பு.

பாடுகிறேன் ரசவாத நொண்டிச் சிந்தைப்
பலசந்த மாய்ப்பாட வாணிகாப்பு
கோடுகின்ற கொங்கையின்னுள் பெற்றபாலன்
குகன்தமையன் மூலவிநா யகனுங் காப்பு
நாடுகின்ற காவுதனில் வாசஞ்செய்யும்
நல்லபதி னெண்மர்கள்தன் பாதங் காப்பு
தேடுகின்ற பொருளனைத்துங் கொடுக்கு மெங்கள்
சிற்பரையாள் பாதமது தினங்காப்பாமே.

### வண்ணச் சந்தம் - தேவர்கள் துதி.

பூவுலாவிய தேவிசுந்தரி போதகந்தரி மாயி சிற்பரை
பூணுநற்சிவ ஞானமுற்றிடவே — கொண்டாடிவே
காவுலாவிய போகநாயகர் கடவுள்சத்திய ரிஷிகள் தேவர்கள்
கருணையுளநந்தி பாதமேதுணையே — காப்பாய் நினையே
பாவுலாவிய போகநாதர்கை பட்சமாகிய கொங்கணர்
பண்புபெற்றிடுங் கருவூரான் வாக்கே—வெகுபோக்கே
நாவுலாவிய சட்டமாமுனி நாதர்சுந்தரர் மச்சரும்
நல்லகோரக்க நாதரைப் பணிந்தேன்—முடிபுனைந்தேன்

### விருத்தம் - நூல்

காசினியில் யான்கொண்ட கற்பங்கேளாய்
கடிதாக நாற்பத்தோர் கற்பமாகும்
நேசமுடன் சித்தியாங் கற்பங்கொண்டால்
நிலைபெற்றே னாகாச நிலைகள்பெற்றேன்
பாசமற்று நேசமுற்றுப் பாரில்வாழும்
பண்புதனை விட்டிழந்து பரமேதேடும்
ஆசையுற்றுப் பேரின்ப மாகுஞ்சித்தி
அடைவாகக் கற்பமுறை சித்திபாரே.

### நூலின் பெருமை.

பாரப்பா வெகுகோடி காலமட்டும்
பண்பாகச் சடத்தோடே யிருப்பதற்கு
நேரப்பா கற்பமது கொள்ளவேணும்
நேர்மையுடன் பத்தியமா யிருக்கவேணும்
காரப்பா உப்புகளைக் கட்டவேணும்
கருத்துடனே குருமுடித்துக் கொள்ளவேணும்
சீரப்பா யிவையாவும் முடித்தோன்சித்தன்
செகத்தினிலே நெடுநாளு மிருப்பான்சீரே

சீருலவு கற்பமுறை போதமீறும்
செல்வாகத் தியமுனிவர் நந்திதேவர்
தாருலவு திருமூலர் சட்டைநாதர்
தமையனெனுங் கொங்கணவர் சகஷ்திரவேந்த
காருலவு கற்பகோரக்க நாதர்
கைவளர்நா கார்ச்சுனர் சாணங்கிநாதர்
பாருலவு போகமுனி யருளால் வந்த
பாலனெனுங் கருவூரான் பாடல்கேளே.

கற்பங்கொண்ட வர்கள்,

கேளப்பா அகத்தீசர் கற்பம்நூறு
கிருபையுள்ள நந்தீசர் கற்பம்நூறு
நாளப்பா போகமுனி நாதர் கற்பம்
நாற்பத்தி நாலுகற்பம் நன்றாய்க் கொண்டார்
வேளப்பா சட்டைமுனி தின்றகற்பம்
மேதினியி லிருபத்தோர் கற்பமாகும்
ஆளப்பா கொங்கணவ ரீரெட்டாக
அருந்தினார் கற்பமிக அருந்தினாரே.

அருந்தினார் திருமூல ரறுபத்தாறு
அற்புதமாய்க் கற்பங்க ளன்பாய்க் கொண்டார்
பொருந்தியதோர் கோரக்க நாதர்தானும்
பூதலத்திற் றெண்ணூறு கற்பங் கொண்டார்
திருந்தியதோர் ரோமரிஷி கூனக்கண்ணர்
செப்பமுள்ள மச்சமுனி இராமதேவர்
வருந்தியே யெழுபத்தோர் கற்பங்கொண்டார்
மானிலத்திற் சாகாத வரம்பெற்றாரே.

வரம்பெற்றார் வயதுவரை கற்பங்கொண்டார்
மார்தர்களை மேவுபர்காண் மகவான் வாழ்வு
சரம்பெற்ற ரறுபத்து நாலுகோடி
சத்தரிஷி மாமுனிவர் சடத்தினாலே
பரம்பெற்றார் குகைதோறுஞ் சமாதிகொண்டார்
பண்புபெற்ற ரவர்கள்கொண்ட கற்பத்தாலே
சிரம்பெற்ற ரமுதமுண்டார் சிவயோகத்தின்
சிந்தையதா யுள்மகிழ்ந்து தெளிந்து வாழ்ந்தார்

வாழுகின்ற ரிஷிகள்முத்தி வைராக்யத்தால்
மானிலத்திற் றவசிருந்து பேரும் பெற்றார்
ஆழுகின்ற கற்பமெல்லாம் நாலதாகும்
அருந்தினார் சிவத்தியான மன்பாய்ப்பெற்றார்
எழுதூராயிரத்தோர் சித்தர் தாமும்
இனிமையுட னெழுபத்தோர் கற்பங்கொண்டார்
கோழுமில்லை உயர்வுமில்லை தாழ்வுமில்லை
கூர்பகலும் ராவில்லை சடம்பெற்றாரே

சடம்பெற்றார் கற்பமெல்லாங் கொண்டபின்பு
தாரணியிலடங்காத வேதைபெற்றார்
திடம்பெற்றார் பத்திமுத்தி மாறுவண்ணம்
சிறப்பாக வைராக்கிய வரங்கள் பெற்றார்
கடம்பெற்றார் கடவுளடி தன்னைக்கண்டார்
காசினியிற் சிவயோக கல்விமானாய்
இடம்பெற்றார் வச்சிரமிட்ட காயமானார்
இயல்பாக வாதநொண்டி திரம்பெற்றானே.

## நொண்டிச் சிந்து.

### குருமுடிக்குஞ் சரக்குகள்.

வீரனெனு மரகாச தீரனிந்த
மேதினி யாளுஞ்சாதி லிங்கத்தளவாய்
சூரனெனுந் துள்ளுகுட்டி கட்டிநொண்டி
தொங்தோமென் றுடிக்கொள்ளத் துசங்கட்டினான்
சீனனொடு சாரபூரம் மனோ
சிலையொடு தாளகஞ் செப்புத்தொட்டியும்
சோனகர் மெய்த்துவரும் சாரநொண்டி
தொங்தோமென் றுடிக்கொள்ளத் துசங்கட்டினான்

சவுக்காரம் அன்னபேதி கெந்திநவச்
சாரங்கள் கட்டிடமூலி கையாகும்
சுவத்திரை முத்திரையிதாம் நொண்டி
தொங்தோமென் றுடிக்கொள்ளத் துசங்கட்டினான்
உரிசிக்குங் கரியுப்பு வெடி
யுப்புஅட்டு வளையலுப்புக் கல்லுப்பு
அருசைவெ ளுக்குமண்ணுப்பு நொண்டி
தொங்தோமென் றுடிக்கொள்ளத் துசங்கட்டினான்

இந்துப்பு நீருப்பு நரிவெள்ளை
யிணக்குமந்தப் பாஷாணந் துள்ளியைக் கட்டும்
துந்துமி கட்டியுரிக்கும் நொண்டி
தொங்தோமென் றுடிக்கொள்ளத் துசங்கட்டினான்
முத்துப்பவளமிருதார் சாரங்கூவிள
மூலிகை தன்னைக்கட்டும் பாரினிலே
அத்தங் கெவுரிகாரியம் நொண்டி
தொங்தோமென் றுடிக்கொள்ளத் துசங்கட்டினான்.

உருக்குத்தொட்டிப் பொன்னிமிளை நவ
லோகம்அரை பொடிகற்று மரையாலே
சுருக்கிட்டுப் புடமிடச் செம்பாம் நொண்டி
தொந்தோமென் றடிக்கொள்ளத் துசங்கட்டினன்
அழுகண்ணி மார்க்கமெவர்க்கும் உண்டுமது
ஆயிரத்தெண் மாற்றுமேலாக்கிவிக்கும்
தொழுகண்ணி ரசத்தைவிட்டாட்ட நொண்டி
தொந்தோமென் றடிக்கொள்ளத் துசங்கட்டினன்

ஈசுரமூ லிரசங்கட்டும் தெய்
வேந்திரன் பதவியுண் டாக்கிவைக்கும்
துருசிப்படைகளை வெல்லும் நொண்டி
தொந்தோமென் றடிக்கொள்ளத் துசங்கட்டினன்
நாகதேவ தாளிரசங்கட்டும் விரன்
நன்றுரைத்த தலைவனைப் பின்கட்டாய்க் கட்டும்
தோசத்துரு சைவெருப்பிக்கும் நொண்டி
தொந்தோமென் றடிக்கொள்ளத் துசங்கட்டினன்

காந்தச் சவளை யிரக்கக் குன்றி
காரையிலைச் சாறுவிட்டுப் புடம்போடச்
சோந்திடுந் தங்கமீயம் நொண்டி
தொந்தோமென் றடிக்கொள்ளத் துசங்கட்டினன்
ஆடுஞ் சரக்குவகை சொன்னேமிந்த
அறுபத்து நாற்சரக்கின் பலத்தைக் காணும்
சூடுந்தங் காபரணம் போல் நொண்டி
தொந்தோமென் றடிக்கொள்ளத் துசங்கட்டினன்

விருத்தம்.

சரக்குள வழியுங் கூருஞ் சாற்றிய பன்பு கேளாய்
திருக்கண்ட கண்ணுக் கெல்லாந் தீவினை யில்லை யப்பா
உருக்கண்ட சரக்கும் பார்த்தே உற்றதோர் சரக்கைத் தாக்கக்
குருக்கண்டு முடிக்குஞ் செய்தி கூறுவேன் புவியிளோர்க்கே.

துருசுக்குருமுடிக்க. நொண்டிச் சிந்து.

நாய்ப்பாகல் விரையெடுத்துத் தானதை
நன்றாயுலர்த்தியதை யரைத்திடவே
வாய்ப்பாக்கு வெற்றிலைதான் தின்று
வாய்நீரை விட்டதையு மரைத்தெடுத்து

சிறுவில்லை யாய்ப்பிடித்து ஒரு
சித்துக் கலசத்தினில் வைத்தடக்கி
உறுப்பான மேல்மூடி செய்ததனை
உற்பனமாய்த் தயிலங்க ளப்போதிறக்கி.

பீங்கானில் வைத்தெடுத்து நல்ல
பெரிய குருவென் றருமைசெய்து
பாங்குபச்சைத் துருசதற்கு மேலே
பரிவாகப் பூசிவெயிற் புடமாக
வைக்கச்சுண் ணும்பாகும் இந்த
மாகுரு நந்தியா வட்டமதிற்
சூதத்தைக் கட்டிவைக்க வொளி
சோதியா யிடுஞ்சாதி லிங்கமுடன்

வேதச்சவ் வீரனையும் செயம்
வெட்டிக் குறிப்பாகக் கட்டிவைக்கும்
தாளகம் வெள்ளையப்பா அதிற்
சார்ந்த மனோசிலை பற்பமப்பா.
வேணுவின் பத்திரியில் தின
மீதிற் சிவந்திடும் வெள்ளியிலே
சோதனை பத்தரைகாண் மாற்று
தொட்ட சவுக்காரச் சுண்ணமதாம்

வெளுத்த அரிதாரம் நல்ல
வெள்ளியிற் சேர்த்திடவயதொன்பது
தெளித்த மனோசிலைதான் சுத்தச்
செம்பினி லெட்டரை தீர்க்கமப்பா.
பொரிகாரஞ் சுண்ணும்பாம் கற்
பூரமுந் தண்ணியில் நீறுமப்பா
சினமுஞ் சுண்ணும்பாம் நல்ல
செம்புடன் வெள்ளியுஞ் சுண்ணும்பாம்.

தங்கமுஞ் சுண்ணும்பாம் குப்பி
சவ்வீரந் தாளுபதி சுண்ணும்பாம்
உலோகமுஞ் சுண்ணும்பாம் இந்த
ஒன்பது சுண்ணமு மோரிடையாய்.
சரியிடையாய்ச்சேர்த்து அது
தான்களஞ்சி வீரந் தான்சேர்த்து
இதுக்குச் சரியிடையாய் நவச்சாரம்
இயல்பாகக் கூட்டிக்குரு வெட்டிலொன்றாய்.

பீங்கானில் வைத்திருக்க அது
பேரான மறுநாளிற் சலமாகும்
உலோகங்கள் தண்ணீராம் யீயமது
ஒருமா றூற்றுக்கு யீயதிலே.
மாத்தது பத்தேழாம் அந்த
மதயானை யுந்தண்ணீ ராகுமப்பா
காந்தம் வெள்ளி தண்ணீராம் நல்ல
கருவான நாதஞ்சிப்பித் தண்ணீராம்.

சத்திப்பு நீராகும் இது
தாண்டவ மாடும்வகை தான்கேளாய்
வங்கம் அரிதாரம் ரசம்
மட்டை மடையன்சவ் வீரமப்பா.
பிரதானி தங்கச்சுண்ணம் இவர்
பேரிற் பெரியோ ரெழுவர்களை
முந்தின செயநீரால் விட்டு
மூன்று நாழிகைவரை யரைத்திடவே

கட்டி மெழுகாகும் இந்தக்
காரண மான குருவதனைத்
தப்பாது செம்பினிலே இது
தானொரு மாவிடை தானீய
தங்கச்செம் பாகுமப்பா இந்தத்
தங்கச்செம் பதனிற் றூனொருமா
வெள்ளியிடை றூறுகளஞ்சி அதின்
மேற்சத பேதி காணுமப்பா

ஆயிரத் தெண்மாத்து தங்க
மாக யிருக்கின்ற தோரிடையும்
சவ்வீர மோரிடையும் அந்தத்
தாளு பதியுஞ் சரியிடையாய்
சூதமுஞ் சரியிடையாய் விட்டுத்
தொந்தித்துச் செயநீரை நன்றாக
விட்டரைத்துத் தங்கக்குகையில் மிக
விரும்பியே குக்கிடப் புடம்போட.

முருக்கம்பூச் செந்தூரமாம் இது
முன்காணி கோடியைப் பேதிக்குங்காண்
செந்தூர மாவிடையாய் மண்டலந்
தேனிலே சேர்த்திதைக் கொண்டு விட்டால்

ஈசுர னிவனுவான் வேறே
இயல்பான சித்தர்களுந் தேவர்களும் இவரும்
அடிபணிந்தே தொழுவார்
அம்பல மாடத் துணிந்துகொண்டு நல்ல
தொந்தோமென் றுடுவர்காண்
தாயமா யவன்செத்துப் பிறந்தாலும் சொல்ல
இவனுக் கீடாவதில்லை
இதுவுற் பனமப்பா நிச்சயங்காண்.

சிவனாணை தப்பாது நல்ல
தேவலோக ரம்பைகசெய்வார் பணிகள்
தப்பாது முக்காலுந்தான் இதைத்
தாரணியில் யாவருக்குஞ் சொல்லாதே
சொன்னு லெழுநரகம் இதனை
சொல்லாட்டா லிவனேபெரியோனும் எங்க
இவனுக்கொப் பாருமில்லை
ளீஸ்வரி யாணை தப்பாது

வங்கரச மெழுகு - விருத்தம்.

மடையன்சங் கிலிய தாக வங்கமோர் தூண தாகக்
கொடியவப் பிரகச் சுண்ணக் கோளிலாச் சூடன் கூட்டி
மடையனைக் கவசங் கட்டி வங்கத்தில் ரசத்தையூட்டித்
திடமுடன் தனப்பால் விட்டுச் சேர்த்தரை மெழுகதாமே.

## ஆனந்தக் களிப்பு.

வங்கரச மெழுகு செய்யும் விதி,

மெழுகையொரு மாவெடுத்து நல்ல
வெள்ளி நூறு களஞ்சியிற் றனியப் மதி
பழுப்பேரி நின்றே யுலாவும்
பதினெரு மாத்துச் சரியாகக் காணும் உமிரிச்
தப்பில்லை தப்பில்லையப்பா
சாரத்தில் கட்டிடவகை கேளு யிந்து
ஒப்பில்லாக் குருவப்பா
ஊருக்குள் விடியுமுன் னொலியிடுஞ்சாவல்

மெய்ப்பான சுண்ணாம்பெடுத்தே அதற்கு
வேண்டுஞ் சவுக்காரத் தெண்ணெயை வாங்க
வையகத் தோரறியாமல் கடையில்
வாங்கியே வைத்து மகிழ்வாக நீயும்
பிண்ணாக் கிலைமூலி வாங்கு அதைப்
பேய்க்குமட்டிக் காயினுள் ளாகவேவைத்து
வண்ணான் துறையில் வெளுத்த அந்த
மண்ணுப்பினாலே குருவாகு மப்பா

வெளுத்த சவுக்காரம் நீறும் முன்
விடையிட்ட சாரமுஞ் சுண்ணாம்புங் கூட்டி
பழுது படாம லரைத்து அந்தப்
பச்சைத் துருசுக்குப் பூசிவெயிலில்
வைக்க வெளுப்பேறு மப்பா பின்னும்
மண்ணுப்பினாலே புடமிடக்கல்லாம்
சிக்கென வுலையில்வைத் தூதப் பின்
சிவந்து வெளுப்பேறிச் சுண்ணமுமாகும்

தண்ணீர் வராத இலையில் இந்தச்
சற்குரு விழுந்தவுடன் தண்ணீர்வருகும்
உண்மைஉகா யிலைத் தண்ணீர் நல்ல
உற்றதொரு கெந்திரசம் செந்தூரமாகும்
வெள்ளியிற் களஞ்சிக் கொருமா அந்த
வேதைபதினொரு மாத்துமேகாணும்
உள்ளபடி இதைத்தானும் யார்க்கும்
உண்மை சொல்லாதே வெளியிட்டு நீயும்.

வெண்பா.

நாகரச பற்பமொடு நல்லதொரு கெந்தகத்தைப்
பாகமுடன் செந்தூரம் பண்ணியே—நாக
ரகலிங்க முங்கூட்டி நானூற்றுக் கொன்றீய
ரசமாந் தறுபத்தி நால்.

## நொண்டிச் சிந்து.

### சூதங்கட்டி வேதைசெய்ய

ரசபற்பஞ் செய்வதற்கு செங்கொடுப்பை
நாகமது சிறியா நங்கையிற் கட்டும்
பிரியாமல் வாலைரசம் யெடுக்கப்
பேணியே அதைநானுஞ் சொல்லுகிறேன்
ரசநாகந் தன்னையுந்தான் கல்வத்தில்
நன்ருகவே நுணுக்கி யதையெடுத்து
அமுதம் விட்டரைத்துப் பின்பு
அப்பாலே இன்னமொரு வகைகேளு

### வாலைரச மெடுக்க.

வெற்றிலைச் சாறும் விட்டு அரைத்ததில்
வேண்டுஞ்சவ் வீரமதைப் போட்டரைக்க
வாலைரசந் துள்ளியேவிழும் இந்த
வகைப்படி நடத்தினு லுற்பனமப்பா
தாளகத்தின் வேதையைக்கேள் காரீயந்
தன்னிலே வூட்டியபின் சொர்னமதுவாம்
வங்கம் வலிந்துபோச்சு இந்தயிடை
வளர்தங்கஞ் சேர்த்துருக்கு ரசத்தைவிட்டு

உண்ணியே வேதை பண்ணி மனோசிலை
ஓரிடை யாகவே அரைத்துருட்டி
லிங்கம் பொடித்துத் தூவி குக்குடம்
நிச்சயமாய்ப் புடம்போட அசையாது
செந்தூரமா யிருக்கும் அதனைத்
தேனி லரைத்துமஞ் சாடியுண்டையாய்க்
களஞ்சிவெள்ளி யிற் கொடுக்க மாற்ருறு
கைமேலே காணுமப்பா மெய்யிதுசொன்னேன்

காரீயங் களஞ்சிக் கப்பா கெவுரியைக்
கட்டிக்கொண்டு காசிடை களஞ்சிலீயக்
காரீயங் கலிக்கு மப்பா தங்கத்திற்
கண்ட யிடைக்குச்சரி யாயுருக்கி
மணியெடுத்து ரச வீரம் லிங்க
மதுவுமோ ரிடையா யெடுத்துக்கொண்டு
செங்கற் குகையில் வைத்துப் புடமிடக்
செந்தூர மாகும்பின்பு தொந்திக்கவே

வங்கமும் ரசமு மொன்றாய்ச் சித்தா
மணக்கெண்ணெயி லுருக்கி யிணக்கமுடன்
செந்தூரந் தன்னுடனே சன்றாய்க்
சேர்த்துக் காரியம் உருகையிலே
தோய்ந்ததொரு மாக்களஞ்சி யியம்
சுகமாகத் தானியப் பழுப்பேறும்
ஒன்பதரை குறையாது இதை
யொருவருக்குஞ் சொல்லாதே நயமுடனே

## நாகங்கட்டுதல்.

வெண்பா.

வில்வப் பழத்தால் விடக்கினெலும்பாலுமே
சொல்லதொரு மாதனையிற் சோருங்காண்—வல்லபமாய்
ஆனரசங்கட்டும் அருங்கொட்டி யின்கிழங்கு
கானமுடன் நாகமதைக் கட்டும்.

காத்தவராயன் சந்தம்.

கட்டுதற்குக் காடைப்புடமாம் போடக் கற்பூரம்போ லெட்டுமது
வெட்டுதற்குப் பட்டுவிடும் இது வேதையிலே போவதுபார்
தாளகத்தைக் கட்டுதற்கு வகை தானே உரைக்க லுற்றேன்
வாளம்வெடி யுப்புடனே சீனம் வளரும் நவச்சாரமும்
பழம்புளியு மோர்பலங்காண் இது பதமா யரைத்தெடுத்து
இளங்கிட குக்குடமாய்ப் போட் டிருக்கநீ ராகுமப்பா
சீனக்காரங் களஞ்சிவகை வீதம் செப்பமுடனே யெடுத்து
பானமெனும் வெடியுப்பு மொரு பலமாயெடுத்துப் பின்பு
நீராகுங் கண்டாயே அந்த நெறிபாகந் தப்பாமல்
வீரான பூரமொடு சுத்த வீரன்பணவிடையாய்
பீங்கானில் வைத்திருக்க அது பித்தனால் மூன்றுநாள்
ஆகாரச் சத்திய்தாய் இது அஞ்சாநாள் தண்ணீராம்
இந்தச் சலந்தனிலே வைத்தெடுத்த சரக்கெல்லாந்தான்
தொந்தமாய்க் கட்டுமப்பா மேலும் குருமுருகுமப்பா
கட்டுஞ்ச ரக்கெல்லாந்தான் இந்தக் கன்னியருளினாலே
திட்டமா யிச்சலத்தா லதைச் செய்துகட்டிக் கொள்ளுவீரே

## அம்மானைச் சந்தம்.

### குருச்செயநீர்

திருவா யுரைத்த திருவம் பலநாதர்
குருவா யுரைத்த குருச்செயநீர் தன்வகைகேள்
குங்கும மின்னார் குடலிரத்தந் தான்பிழிந்து
பொங்குமொரு சீனம் பொடியாய்ப் பொலிவிருத்தி
அண்டத்தை முங்க அதில்நிரம்ப மூடிவைத்துப்
பண்டு மறுநாள் பார்க்கவே தோடுருகி
சுண்ணமதாய்ப் போகத் துடிக ளடங்குமப்பா
எண்ணமுள்ள மஞ்சள்வெள்ளை யின்சவ்வுபோந்திருக்கும்
போந்தகரு வோட புகலுஞ்சா ரந்துருசு
சேர்ந்தவகை யொன்றுக்குக் கூறுங் களஞ்சிரண்டு
போட்டரைக்க நல்ல புதுமை மெழுகாகும்
ஒட்டபழச் சாறும் உருகுமண்டச் சுண்ணும்பும்
சாரங் களஞ்சிரண்டு தப்பாம லேபோட்டு
வாரநாள் வெய்யலிலே வைத்தால் மெழுகாகும்
அம்மெழுகும் இம்மெழுகும் அம்மியிலே தானும்வைத்துச்
செம்மை யுடனரைக்கச் செயநீராங் கண்டாயே
கண்டதொரு தண்ணீரில் கட்டுஞ்சரக்கெல்லாந்
துண்டா யிரும்பைத் தோய்த்துப் புடம்போட
செம்பா மிரும்புமப்பாச் செயநீரின் கட்டுமுறை
உம்பர்கள் தன்னுணை உற்பனதும் பொய்யாது

## கெவுரிவெள்ளைப் பாஷாணக்கட்டு

### காத்தவராயன் சந்தம்.

கற்சுண்ண மோர்களஞ்சி சீனிக் காரமு மோர்களஞ்சி
கற்சுண்ணந் தனைநீற்ற அந்தக் காரமது செயநீராம்
காரமிடை நவச்சாரம் அது கண்டயிடை துருசையிட்டே
சீருடனே தானரைத்து அந்தயிடை சேர்த்துவிடு கெந்தகத்தை
சோரச் சோரத் தானரைத்து வெகு துருசாய் வெயிலில் வைத்துக்
காரமுள்ள குருவாகும் முப்புகண்டறிந்து கொள்ளுமப்பா
உப்பில்ரசந் தன்னையுந்தான் நீயும் ஊட்டி யரைத்திடவே
செப்பமுடன் மெழுகாகும் அதைச் சிறப்பாக வேயெடுத்து
வெள்ளியுந்தா னிருபதுக்கு மெழுகு வேண்டியே ஒன்றீய
உள்ளபடி மாத்தேழு தப்பாது உண்மையாய்ச் சொல்லிவிட்டேன்

## நொண்டிச் சிந்து

### துருசுச்செம்பு வேதை

நல்ல துருசுச்செம்பு வேதை
நன்றாகச் சொல்லுகிறேன் தெம்பாகவே
வல்லதொரு அரிதாரம் சித்திசெய்து
வகையா யெடுபலம் பத்துதனை
எலுமிச்சம் பழஞ்சாற்றால் ஒருசாமம்
இயல்பாக வேயரைத்துப் பிசகாமல்
வலுமையாய்க் கண்டரவி தகட்டிற்கட்டி
மற்றபடி நொருங்கமட்டும் புடமூன்றிட்டு

வசமாகக் குகையிலிட்டு பொன்
வண்டுகூட்டிச் சேர்த்தரைத்து உருக்கச்சத்தாம்
தசமாகுஞ் சத்தினுட பெருமை
தயவான வெண்கலம் போற்றேனும்
சத்துடைத்துக் கற்பூரத்தைப் பாதிசேர்த்து
தயவாய்முன் பழச்சாற்றில் சத்தையாட்டி
மத்தபடி வில்லைதட்டிக் காயவைத்து
வகையுடன் சிவக்கமட்டும் புடம்போடு

மதியெட்டில் ரெண்டுசேரு விற்றிடவே
மாத்தது யெட்டாகும் மகிழ்வாக
விதியுடன் துருசுக்குள்ளே செம்பைக்கொண்டு
வேணுமென்ற சத்தாக்கி உருக்கிக்கொள்ளு
உருக்கின செம்பெடுத்து மதியுள்ளே
ஒருமையாய்ப் பாய்ச்சிட யேமமாகும்
பெருக்கின கண்டரது செம்புதானும்
பெருகவே மாளாட்டால் ஏமமில்லை

நல்லதொரு களிம்பாகும் குணமில்லை
நாட்டிலுள் ளோர்பிழைக்கச் சொல்லுகிறேன்
வல்லசெம்பு யேமமோரிடை யுருக்கியே
வாகாய்த் தகடடித்து நயமாக
சத்தியுடன் சீனஞ்சேர்த்து பழச்சாற்றால்
தாட்டிகமா யரைத்து அப்பியேதான்
சித்தியுடன் புடம்போட்டு நெருக்கியே
தெளிவாகக் கற்பூரம் பாதிசேர்த்து

செம்பாகப் புடம்போடச் செந்தூரமாம்
செப்பமா யதையெடுத்து மதியெட்டில்
சுயமாக ரெண்டுதாக்க அது
சுந்தரம்போ லேமமாகும் கண்டறிந்து
வித்துச் செலவுசெய்து யேழைகட்கு
மிகஅன்ன தானங்கள் தான்கொடுத்து
சித்தி மிகவும்பெற்று ஞான
தெரிசன மேயாகும் தெரிந்திடுவாய்

விருத்தம் - உப்புக்கட்டு.

பாரப்பா கொங்கணவ ருப்புதன்னைப்
பரிவாகக் கட்டறியா ரென்றுஞ் சொன்னார்,
நேரப்பா கட்டுதற்கு வகையைக்கேளு
நீதியுடன் விள்ளுகிறேன் புளித்தஆரை
சீரப்பா சிறுநீரி லிடித்துச் சாற்றை
சிறியதொரு சட்டியிலே சென்றுவாங்கி
சேரப்பா உப்புதனை நாலுக்கொன்று
சேர்த்தன லிற் குருகவே தீயிற்காய்ச்சே

காய்ச்சவே நீரெல்லாம் வத்திப்பின்பு
கடுங்கார மேறுதற்கு வெயிலில்வைப்பாய்
வாச்சநில வுப்புநாலு கரியுப்பொன்று
வண்மைகரு யுப்புதற்குப் பாதியண்டம்
பூச்சான தோடதனைக் கழற்றிச்சேர்த்துப்
புதுமையுடன் சீனமண்டத் திடையாய்க் கூட்டி
ஆச்சிமா ரமுதப்பால் பழச்சாற்றோடு
அறுசாம மிடைவிடா தரைத்திடாயே

அரைத்ததொரு உப்பதனை வில்லையாக்கி
அடைவாக ரவிமுகத்தி லன்றுவைத்து
விரைப்பாகல் கொட்டையிலே தயிலம்வாங்கி
மீறியதோர் துருசுக்கு நன்றாய்ப்பூசி
இரவிபட வைத்துமறு நாளெடுத்து
இனிமையுள்ள உப்பதற்குக் கவசம்பூசி
துருசதனுற் சுண்ணும்பாம் புடத்திற்போடச்
சுந்தரமாங் குருவாகும் உப்புச்சுண்ணம்

சுண்ணமப்பா பொரிகாரஞ் சீனக்காரம்
சுண்ணமப்பா அரிதாரஞ் சுண்ணமாகும்
சுண்ணமனே சிலவீரன் சுண்ணமாகும்
சுண்ணமப்பா கற்பூரஞ் சுண்ணமாகும்
சுண்ணமப்பா தாம்பூரம் சுண்ணமாகும்
சூதமொடு லிங்கவங்கஞ் சுண்ணமாகும்
சுண்ணமப்பா வெள்ளிதங்கஞ் சுண்ணமாகும்
துருசினு லுப்பான குருச்சொன்னோமே

சரக்குக்கட்டச் - செயநீர்

குருச்சொன்னோ மீரேழு சுண்ணமப்பா
குருவகையின் செயநீராற் கொண்டுநல்க
திருவான நவச்சாரஞ் சரியாய்ச் சேர்த்து
சிறப்பாகப் பீங்கானிற் சமமாய்வைத்து
உருவாகும் மூன்றுநாள் தண்ணீராகும்
உற்ற அறுபத்திறுற் சரக்குங்கட்டும்
பொருளாகும் அன்னபேதி கள்ளிச்சாற்றில்
போட்டரைத்துத் தெளியவைத்துக் காய்ச்சுப்பாமே

வேதை யுப்பு.

உப்புடனுப் புச்சுண்ணந் தன்னைநீற்ற
உகாயிலையிற் தண்ணீராம் பிராயின் பாலில்
சிப்பிசங்கு திருகுகள்ளித் தண்ணீராகும்
சிறுதுத்தி யாவிலையில் றண்ணீருண்டாம்
அப்பான சத்தநிலைல் நீரதாச்சு
அறுபத்து நாற்சரக்குந் தோய்த்துவாட்ட
மெய்ப்பாகக் கட்டியதோர் சரக்கதெல்லாம்
மெழுகாகும் அட்டலோகம் வேதையாமே

வேதை செய்ய.

வேதையாம் மெழுகுதுத்தம் மெழுகுநாகம்
வீரமொடு லிங்கமரி தாரஞ்சூதம்
வாதமிகு மெழுகுகெந்தி வங்கமனேசிலையும்
வண்மையுடன் மெழுகாகுஞ் செம்பிற்றுக்க
நாதனென்ன அறுபத்து நாலுமாத்து
நயமான பசும்பொன்னு யிருக்குமப்பா
வேதைதங்க மாவிடையாய் மெழுகுகூட்டி
வெள்ளியிலே தாக்கச்சதா வேதையாமே.

சதாவேதை யாயிரத்தெண் மாற்றுக்காணும்
தப்பாது சிவனாணை தப்பாதுண்மை
பதமாகும் ஆயிரத்தெண் மாற்றுத்தங்கம்
பாகமுடன் செந்தூர மாகவைத்துக்
குதராமல் மண்டலமே கொண்டாயாகிற்
கூர்ந்தொருமா விடையெடுத்துக் கொள்ளுமப்பா
சதமான காரமெல்லா மிதற்கீடல்ல
தாரணியிற் றுண்டவனுஞ் சம்புவாமே

சம்புசிவ சங்கரனு மிவனே யாவான்
தாரணியிற் சிவயோக மெடுத்துக் கொண்டான்
நம்பனடி கண்டாலும் பத்திமுத்தி
நாதனு ரிவருக்கீ டல்லவய்யா
செம்பொன்னின் அம்பலத்திலாடு வோன்காண்
ஜெகமீரே ழுலகமெல்லா மொன்றாய் நிற்பான்
உம்பரிலும் மும்மூர்த்தி யிவனைக்கண்டால்
ஓதியே ஓம்நம சிவாயமென்னே

வேறு.

மன்னவன் வீரன் சூதன் வாசப்பிர தானி யோனும்
கன்னியர் தனப்பால் நாவிக் கருத்ததோர் வெள்ளைநஞ்சும்
கன்னிகைச் சாற்றால் மானுங் கடியதோர் குகையிலிட்டுச்
சின்னங்கள் தாரைசூதச் சிந்தாமணிக் குளிகன் வந்தான்

வந்ததோர் வாயுவேகம் மனவேக மாக வாசி
அந்தர கபால சோகம் அட்டமா சித்தன் காண
செந்தமிழ்க் கமல வாணி ஜெகத்துக்கோ ரிராஜ தானி
சுந்தர அழகு பொன்னின் தூயனும் வச்சிரகாயன்

வெண்பா.

காயம் மிளகுசுக்கு கார்கடுகு வெந்தயத்தால்
ஆய மெடுக்க அறிவுண்டோ—தூயதொரு
கற்பவகை செய்திமுறை கற்கமனச் சித்தியுற
சிற்பரையாஞ் சத்திசிவனே.

## கற்பத்திற்குப் பச்சிலைகள்

### நீலிநாடகச் சந்தம்

பொன்னுங்கா ணித்தகரை யாரைக்கற்பம் புருடர்வய தாயிரமாம்
சொன்ன மதிமயமாம் சிறியாநங்கை சோதி விருட்சமப்பா
கானப்பிலாத்தயிலம் பேய்ச்சுரை கடுக்காய்ச் சுக்கிஞ்சியதாம்
தேனது மாங்கனியில் தயிலமும் தேவதா ரீமரமும்
சாதியின் கெந்தகமும் சூதம் சரியான நாகமுடன்
ஆதி யரிதாரம் செந்தூரம் ஆக்கியுண்டால் கோடியுகம்
கோங்குவிஷ்ணு பூபதியும் நாகமல்லி குமரியம்மான் சீந்தியுடன்
வேங்கைரோம விருக்ஷம் நல்ல வியப்பான சோதிப்புல்லும்

சாயா விருக்ஷமதில் தேவரம்பை தானேயுலவுவர்கள்
மரியாதிவிந்தையப்பா கருநெல்லி வளரும்வெள்ளைச் சாரணையும்
கார்கரந்தை யாவரையும் வெள்ளை நாவற்சு ணங்குமரம்
பேர்பெருகுந் தில்லையப்பா நல்ல பிரியமொடு செண்பகப்பூ
எருமைகனைச்சான்விருசம் செங்கொடுவையிலைதும்பி பேய்ப்பீர்க்கு
ஒருமா மரவிதையாய்ச் சேர்த்து உயர்ந்ததயி லம்மிறக்கி
செங்கொடி வேலியுடன் அவுரி சிறந்த உகாமரமும்
பொங்குஞ் சதுரகிரி தன்னிற் பொருந்தியே தானிருக்கும்

ஆதிமுதல் சொன்னதிவை சடம் அழியாத மூலியிது
நீதியுடன் போயறிந்து இதை நேயமுடன் கொண்டுவந்து
காந்தமொடு கெந்தகத்தைப் பற்பம் கணக்காகவே முடித்து
சாந்த முடனதையுஞ் சேர்த்துச் சாப்பிடச் சித்தியதாம்
காக்கை கரிச்சானுஞ் செந்தலைக் கருடன் கழுகதுவில்
நாக்குதனை யெடுத்து வஸ்திரகாயம் நன்றாகச் செய்தொருமா
மண்டலந் தேனிற் கொள்ள தேகம் வச்சிர காயமதாம்
விண்டுநான் சொல்லிவிட்டேன் இதனை மேதினிற் சொல்லாதே

சந்தணம் தான்றிமரம் வெட்பாலா சாரணை வில்வமரம்
விந்தைபேயன்வாழைப் பழம் மேன்மையாய்க்கொள்வோர்நாம்
கஞ்சாகை யான்மேனி நீர்நெருப்புக் கண்டங்கத்திரி வள்ளியொடு
தஞ்சமென் கொட்டிக் கிழங்கு இதைத் தப்பாமலே யெடுத்து

எட்டிமர வேர்த்தயிலம் அதை யின்பமுடனே யிறக்கி
குட்டித் தக்காளியிலை சிந்தி கோடகசாலையுடன்
கூத்தன் குதம்பையுடன் மேற்சொல் குருவான பற்பமுடன்
சேர்த்தியுட னழிஞ்சித் தயிலம் நேர்மையுடனே சேர்த்து

இன்னமுங்கேள் கற்பவகை இயல்பாகவே தானும்
சொன்னதொரு மாமரத்தின் புல்லுருவி தோற்றமுட னெடுத்து
அத்தி மரம்வாகை புளி யாரைநில வாகையுடன்
சித்திகற் றாமரையும் நல்ல செய்யகுளம் புச்செடியும்
மலைமா மரவேரும் பட்டை வகையாக வேயெடுத்து
அலையாதே கற்பமிது பற்பம் அருமையுடனே சேர்த்து
சித்திர மூலமுடன் சூடன் சிவனருட வேம்பு
சித்தகத்தி தன்னுடனே பிரமி செங்கற்றா ழைதானும்

அலரி சாகாமூலி மல்லி இன்னும் அவுரியுடன் வல்லாரை
விலாமிச்சை தன்னுடனே கூகைநீர் வெளிச்சி மரத்தோடும்
முப்பிரண் டைகள்ளி வீழி நல்லமூலப் புளியுடனே
செப்பமுடனே துளசி வேம்பு சேருங் கருடக்கொடியும்
சிவனரின் வேம்புடனே வெள்ளறுகு சின்னிநாக தாளியுந்தான்
தவத்தோர்க் குதவியுள்ள ஊமத்தை சதுரக்கள் ளியுடனே
எருக்கிலை தன்னுடனே கடுக்காய்ப்பூ இயல்பான முள்ளிலவு
கருடனுட கிழங்கும் நாயுருவி கருவூமத் தைதானும்

திருகுகள் ளியுடனே கட்டுக்கொடி செந்நாயுருவி யுடன்
பெருகுதிர வேங்கை வெடியுப்பு பேராம்செங் கோவையுடன்
சூரத்து நிலவாகை மிளகு சூரத்து ஆவரையும்
பாரமுள்ள சேங்கொட்டை வால்மிளகு பங்கம்பா ளையுடனே
சித்தமுள்ள வெள்ளெருக்கு கோவை செந்நாயுருவியுந்தான்
தக்கமுள்ள காஞ்சிரையும் வெண்மிளகு தக்காளிதன் னுடனே
சேம்புக்கொடியோடு கொடிக்கள்ளி சிவகரந்தை தன்னுடனே
வேம்பின்மேற் புல்லுருவி மிக்க வேலாமேற் புல்லுருவி

வான்கமேற் புல்லுருவி தேக்கு மாஉசில்மேற் புல்லுருவி
தாகமுட னுலின்மேல் மிகத் தான்படர்ந்த புல்லுருவி
நூத்தியெட்டுக் கற்பமதும் அறிந்து நுணுக்க முடனே தான்
சேர்த்தியுடனே கொண்டால் சடலம் நிலைத்துவிடுந் தப்பாது
இந்தநல்ல கற்பமதிற் கொஞ்சம் இனிமையாய்க் கொள்ளாமல்!
சந்ததமும் பெண்வலையிற் சிக்கித் தானலைந் தறிவுகெட்டே
நன்னயமாய் வாதிகளும் மிக ரசவாதஞ் செய்வேனென்று
சொன்னமொழி கேளாத மடைத் துன்மார்க்க னுத்தருந்தான்

## கற்பங் கோள்ளாமல் வகாரம் நிலைபெறுதேனல்.

இரசவாத மூதூரது இந்த இராச்சியமுந் தெரியாதோ
பசியாமற் சோறுகறி நித்தம் பாக்குடனே தின்பதினால்
மலைமட்ட மானகரி ஊதித் தரைமட்ட மாய்ப்போயும்
உலைதிட்ட மாகியது கிட்டம் ஓங்குமலை போலாயும் [தாய்த்
பெருங்குறடுகால்கட்டையாய்த் தேய்ந்து பேணியிவன் மட்டைய
துருத்திவாய்மட்டமதாய்த் தோய்ந்தும் சுட்டிடவேநினைப்பான்
உலையுந் துருத்தியும்போய் கண்புகைய ஊதித் திரிவார்கள்
வலையிலகப் பட்டுழன்று இவனும் மான்போ லலைவான்காண்

## வகாரமுடிந்தபின் மகிமை.

சுளுவாய் வகாரமதைத் தெரியச் சுருதியுத்தி யின்முறையாய்க்
களிப்போடு கற்பமுண்டோன் எவனோ காண்பானே வாதமுறை
ஓர்மாற்றுக் கண்டாலே இவனுக் குலகிற் கலிகளில்லை
பார்தனிலே மாற்றிரண்டு கண்டால் பாவங் கிடையாது
மூனுமாற்றுக் கண்டவர்க்கு மும் மூர்த்தி தெரிசனமாம்
தானுவாய் நால்மாற்றுக் கண்டால் தவம்பெற்ற தேகமப்பா
அஞ்சுமாற்றுக் கண்டாலே அவ னுதிசிவ னுவான்காண்
சஞ்சலமில்லா றுமாற்றுப் பார்க்கத் தன்னைத்தா னறிந்தோனும்

ஏழுமாற்றுக் கண்டார்க்கால் வந்த எமனும் பயந்து நிற்பான்
வாழுமொரு எட்டுமாற்றுக் கண்டால் மானில மயக்கிடுவான்
மத்தநவங் கண்டவர்கள் அவர் மகிமைபெற்ற சித்தனப்பா
பத்துவர்ணங் கண்டவர்க்கு மிகப் பாதம்ப ணிந்திடுவோம்

இந்தவிதந் தெரிந்தாலே தேவ ரிந்திர பதவியுண்டாம்
சொந்தமுடன் வந்துசித்தர் அங்கே தொண்டுகளுஞ்செய்திடுவார்
அமுதரச கற்பமதை நீ யறிந்தின்ன தென்றறிந்து
சமுதாய் வழலையுடன்இவைரெண்டுந் தான்சேர்த்தெடுத்திடுவாய்

இரசவாத கற்பமதை விடாமல் நாட்டமுடன் கொண்டாக்கால்
நிசமாய் மலஜலங்கள் பட்டயிடம் நிதிவேதை காணுமப்பா
அட்டலோகம் பேதிக்கும் வெகு ஆச்சரிய மாயிருக்கும்
திட்டமாய்த் தான்பழுக்கும் இது சிவனாணை தப்பாது
என்குருவு போகநாதர் முன்னம் இனிமையுடன் சொன்னதிது
தன்மையுடன் சொன்னேனப்பா இனித் தவராமற்செய்திடுவாய்
தாரணைவிடாமற் செய்தால் பின்பு சர்வமுந்தான் பொன்னாகும்
பாரினிலே வெளியாக உனக்கு பன்பாகத் திறந்துவிட்டேன்.

கும்மிச் சந்தம்.

கும்மி யடிபெண்ணே கும்மியடி எங்கள்
கோரக்க நாதர் திருமூலர்
செம்ம லுறையுவர்ச் சாரமென்றே மேலுஞ்
சேர்ந்துகும்மி யடியுங்கோடி
பச்சைத் துருசு வெளுப்பாக நில
பாருப்பினாலே புடம்போடு
உச்சிதமாகவே சுண்ணம்பாம் இது
உதடு சிவந்திடும் பாருங்கோடி

வேதைச் சுண்ணம்.

குங்குமக் கோதைக் குடல்பிடுங்கி அதைக்
கூறிட் டொருபுறம் வைத்தேதான்
தங்கம தாம்அண்ட வெள்ளைக் கருவினிற்
றானே சமர்த்தா யிருந்துதடி
பாகமாம் முப்பான் வயதுள்ள நல்ல
பாவை யவளொரு அங்கியிட்டாள்
வேகமுள்ள சூடன் வெள்ளைச் சுண்ணம் அது
மீது சரியிடை தானரைத்தே

வெள்ளைக் கருவிட் டரைத்த பின்பு — அதை
மேலே கவசமாய்ப் பூசியபின்
உள்ள புதுச்சட்டி தன்னில் — அமுரி
உவர்மண் வைத்துப் புடம்போட
மண்ணைப் பரத்திப் புடமும்வைத்து — நல
மாகத் தும்பையின் சாற்றைவிட்டு
மின்னே அரைப்படி மண்ணையிட்டுப் — பின்
மேற்சட்டி மூடிமண் சீலைசெய்து

சீலைமண் மூன்றுசீலை செய்து — வெகு
சீரா யிருசாமம் தீயெரிக்க
வால குருவாய் முடிந்ததடி — அதை
வாழ்த்திக் கும்மி யடியுங்கோடி
இப்படி வெள்ளை வெளுத்த வண்ணான் — அவன்
எப்படி வெள்ளை வெளுத்தானோ
அப்படி வெள்ளை வெளுத்ததோர் வண்ணானை
ஆற்றிக் கும்மி யடியுங்கோடி

## அழுகண்ணிச் சித்தர்—சந்தம்.

### குருச்சுண்ணம்.

நாவிலுமி நீரால் ஆத்தாளே
நன்றா யரைத்தபின்பு
மேவு துருசதற்கு ஆத்தாளே
மேற்பூசி ரவியில்வைக்க
சுண்ணாம்பாங் கெந்தகந்தான் ஆத்தாளே
சுண்ணமடி தாளகந்தான்
எண்ணிருந்த கோடிகவர் ஆத்தாளே
இந்தத் துருசுவெள்ளை

வாதாடி வந்தாண்டி ஆத்தாளே
மாற்றா னிறந்துவிட்டான்
சூதான கோட்டை யெல்லாம் ஆத்தாளே
சுட்டான் துருசாலே
வெண்கார நாவியுடன் ஆத்தாளே
வீரனுக்கு மேற்பூசி
பண்பாயோர் நாளிரவு ஆத்தாளே
பார்த்திருக்கவே யெடுத்து

கண்ணாலே பார்க்கவிது ஆத்தாளே
கணக்காய்ப் பரிமளிக்கும்
ஒன்றுஞ் சீனங்களஞ்சி ஆத்தாளே
ஓர்மஞ்சா டிசேர்த்து
அக்காரம் வெயிலில் வைக்க ஆத்தாளே
அதீதமுள்ள சுண்ணம்பாம்
இக்காரச் சுண்ணமுடன் ஆத்தாளே
இயல்வீரச் சுண்ணமதும்

ரெண்டுமொன் றாய்ச்சேர்த்து ஆத்தாளே
நீள்துருசிற் கவசமிட
விண்டுநிரம் பேர்க்கியது ஆத்தாளே
வெள்ளையாம் சுண்ணம்பாம்
துருசல்லோ சுண்ணம்பாம் ஆத்தாளே
சோதனை பார்க்கவென்றால்
அரிதாரங் கெந்தகந்தான் ஆத்தாளே
அப்பிரக மனோசிலையும்

சொல்லுவேன் கேழ்ப்பாய் ஆத்தாளே
துருசு வெள்ளைச் சுண்ணமுடன்
வெல்லுகரியுப்பை ஆத்தாளே
மிகுசுண்ணம்பாக்கிடக் கேள்
எந்தச் சரக்குந் துருசால் ஆத்தாளே
எல்லாஞ்சுண் ணம்பாகும்
இந்தச்சுண்ணத் தோடு ஆத்தாளே
இதைவகுத்துச் சொல்லுவனே

விருத்தம்.

கரியுப்பை நன்றாய்க் கட்டிக் கதித்ததோர் குகையில் வைத்து
முரியுப்பு முகம்விட் டாடும் முதியதோ ருப்புதன்னை
அரிவுடன் சுண்ணம் பாக்கி ஆயதோர் சாயமேற்றி
உரிவெண்ணெய் யுதவி போல உப்பினின் தொழிலைச் சொல்வேன்.

நொண்டிச் சிந்து-காரசாரச் செயநீர்.

செயநீர்த் திராவகந்தான் அதிற்
சென்றிருநாழிற் ஜலம்வாங்கித்
தானொரு சட்டியிலே அந்தச்
சத்தியா மூவரின் பூவதனை

சிறப்பாக வேகரைத்துப் பின்னே
தெளியவைத்து மறுசட்டியிலே
களிப்பாக விட்டதிலே பின்
கடக்கவைத் தூக்கரி யுப்பதனை

தண்ணீர்ச் சலந்தனிலே ரெண்டு
தரங்காய்ச்சி நன்றாய்க் கொண்டபின்பு
வெண்மை துலங்குமப்பா அந்த
வெந்திட்ட உப்பதனைத் தொந்தித்தேதான்
பாகமுடன்தானே முன்
பதமாய்த் தெளிவித்த நீரதிலே
சிதராம விருந்த அப்பு யிது
திர்க்கமுடனேதான் அரைக்காற்படி

ரெண்டுபடி தண்ணீரை வைத்து
நேராகவே காய்ச்சிக் குறுகவேதான்
ஒருசாதி விறகுபோட்டு அது
உற்பனமாகவே எரித்தபின்பு
தண்ணீரெல்லாம் வற்றியபின் அதிற்
சார்ந்த உப்பெல்லாம் வெழுப்பேறும்
திடமாய்வெண் ணுப்பையெல்லாம் நன்றாய்ச்
சென்றே யெடுத்துப்பின் னும் நன்றாக

குழியம்மி தன்னில் வைத்து ஆதியிற்
கொங்கணர் சொன்ன முறையாகச்
சினமுங் காவிடையாய் மெத்தச்
சிவந்தகன்னி யுதிரந் தானெடுத்து
சினத்தி விடைகூட்டி மிகச்
செக்கச் சிவப்பி தனப்பாலும்
கன்னிச்சா றும்பிழிந்து அந்தக்
கல்லுத்தேயத் தேய வல்லமையாய்

இருசாமமே யரைத்துப் பின்
னெடுத்து உருட்டியே பதமாக
வில்லையாய்ப் பிடித்துவிண்ணில் அந்த
வெய்யோன் முகங்காண மூன்றேநாள்
தப்பாமல் வைத்தெடுத்து யிவர்
தாமே சதமாகத் தானும்வைத்து
இதுக்கு முதலாகத் தானிதுக்
கேற்றதோர் செயநீருண்டாக்கு

## காரசாரச் செயநீர்.

காரசாரத்தின் வகைகேள் கட்டிக்
காரஞ் சீனமொடு நவச்சாரம்
பச்சைத் துருசுடனே அந்தப்
பாரில்வளர் கல்லுப்பு வெடியுப்பு
சென்றோர் களஞ்சிபின்னும் இன்னம்
சேர்ந்த சரக்கொன்று உண்டுகண்டாய்
சம்பளச் சாரதிலே நல்ல
சாதி அன்னபேதி தானரைத்து

## பூநாகக் குரு

அச்சாற்றிலே கரைத்து தானே
அதுகுரு கிடவே காய்ச்சியபின்
உப்பா யிருக்குமப்பா யிது
வோர்களஞ்சி நாவி யோர்களஞ்சி
செய்யதொரு பூநாகம் கரிசல்
சேத்துக்குள் ளேகிடக்கும் பூநாகம்
அந்தப்பூ நாகமல்ல சிவற்பூமி
அதிரக்கிடக்குகின்ற நாங்குருந்தான்.

பூநாகந் தானெடுத்துப் பாலிற்
போட்டுவைக்க மண்ணெல்லாங் கக்கியேவிடும்
மறுநா ளதையெடுத்துக் கொண்டு
மறுவொரு சட்டியிட்டுத் தண்ணீர்விட்டு
கழுவியே தானெடுத்துப் பின்
கடுவெயில் தனில்வைத் துலா்விட்டே
உலர்ந்தபின் தானெடுத்து முன்
னுப்பித்த மண்ணும் பாலயுந்தான்

வெயிலிலே வைத்தெடுத்து முன்சொன்ன
மீறிய பாலது வற்றினபின்
சூடன் சரிகூட்டி அதனைச்
சுகமான பால்விட் டரைத்துருட்டி
வைத்தபின் பூநாகம் நன்றாய்
வாய்ந்திடும் வெள்ளைப் பாஷாணம்
மூன்றுஞ் சரியிடையாய்ப் பின்
மூலைப்பால் விட்டு அரைத்தபின்பு

வில்லையதாய்ப் பிடித்து அதின்
மேல்முன் னரைத்த மருந்துதனைக்
கவசமதாய்ப் பொதிந்து யிரவி
காண உலரவே வைத்த பின்பு
உவர் மண்ணுக் குள்ளே வைத்து அதை
உமியும் யெருவும் மேலேயிட்டு
முழப்புட மாய்ப்போட அது
முக்கிய மாகவே நீராகும்

இதுநீர் களஞ்செடுத்து முன்
ஏற்ற சரக்கெல்லா மிப்படியே
பொடிபண்ணிப் பீங்கானில் அதைப்
போட்டுப் பதனமாய் வைத்திருக்க
மூன்றுநாள் தண்ணீராம் முன்
முடித்த பாஷாணஞ் சவ்வீரம்
காந்தமுடன் நல்லருடன் முன்னே
கட்டிடுஞ் செயநீரிற் றிட்டமதாய்

உப்புச் சுண்ணம்.

வகைக்கிரு காற்களஞ்சி அதை
வண்மைய தாகவரைத் துப்பின்பு
முந்திய உப்பதனை குகை
முட்ட அமுக்கி உலையில்வைத்து
ஊதிக்குகை பழுத்தால் அதி
லுற்றதோர் வெள்ளைக் கொடிவேலி
தோலுரித் துலர்த்திச் சற்று அதை
சூடுபறக்கவே வருத்திடித்து

தூளாக்கிக் கொண்டேதான் கொஞ்சந்
தூளெடுத்துக் குகைதனில் தூவவேதான்
உருகிநின் றுடுமப்பா அதில்
உற்ற பொரிகாரஞ் சற்றிடவே
கண்விட் டாடுமப்பா அதைக்
கரியிட்டுக் கிண்டித் தெளிந்தபின்பு
வட்டக்குழி பிடித்து அதனில்
வாய்ப்புடன் சாய்த்திட வட்டாகும்

வில்லைய தாயிருக்கும் அது
மேலேகவசமுன் னேயரைத்த
கவச மருந்துதனை இந்தக்
கட்டிக்கி அங்கி நிசார்போட்டு
கவசம் பொதிந்தபின்பு நற்
கதிரவன் காண உலரவைத்து
நாலாநாள் தானெடுத்துப் பின்
நலம்பெற வேயுவர் மண்ணெடுத்து

படர்ந்த முடாவுடைத்து அதிற்
பண்புடன் நாழிமண் தான்பரத்தி
அதின்மேற் பேரண்டம் ஒன்று
அமுங்கப் பதித்ததி னுள்ளேதான்
தும்பையிலைச் சாறும் வெண்மை
தோன்றவே ஆழாக்குச் சாறும் விட்டுப்
பத்துக் களஞ்சியொற்ற அந்தப்
பாரக் கவச மருந்துதனை

அதனுள்ளே தான்போட்டு மேலும்
அருக்கன்பாற் றேடது மறைவாகச்
சந்துவாய் தெரியாமல் மூடித்
தாமொரு சீலை வெருஞ் சீலை
செய்து முடியபின் னுவர்மண்
செலுத்தி மேலுழக் குஉமிதனையும்
போட்டுப் பரத்தியபின் இதனைப்
புதுமையுடனே மங்கையிலே

காட்டெரு வைப்பொருக்கி அதிற்
கட்டுக்கட் டாகவே அடுக்கிவைத்து
ரெண்டுமுழப் புடம்போட அது
நேர்மையுட னேவெந்து புடம்நீறி
உப்புஞ்சுண் ணும்பாகும் யிதற்
குற்றவெள்ளை தும்பைப்பூப் போலாகும்
தண்ணீரில் நீறுமப்பா யிது
தானிந்தப் பச்சிலை தன்னிலேதான்.

தண்ணீர் பெருகுமப்பா முந்தச்
சாரங்கள் காரங்கள் தானுண்டது
பெலமாங் குருவாச்சு இந்தப்
பேருகள் பெற்றிடும் நீரதனை
எந்தச் சரக்கினிலும் இந்தச்சத்
தெடுத்துப் பூசிரவி முகத்திருக்கச்
சுண்ணம தாகுமப்பா இந்தச்
சூட்ச ராஜகுரு வகைதனைக்கேள்

முந்தின செயநீரில் கொஞ்சம்விட்டு
மூவிரண்டு சாமமது காயவரைத்துத்
திரிபலை யதின் சாற்றைப் பிழிந்து
சென்றிலுப்பை வேர்த்தயிலம் நன்றாயிறக்கி
இதுவெல்லா மொன்றாக்ச் சேகரித்து
இந்தச் செயநீர்த் தயிலமதில்
நலம்பெருஞ் சவுக்காரத்தை அம்மியில்
நாட்டி நன்றாக அரைக்கவேதான்

ஊற்று வெள்ளம்போலே நல்லெண்ணெய்யது
ஊற்றாரும் ஊற்றாரும் ஒக்கச்சிவந்து
ஒளிவிடு மப்போது இந்த
உலகத் தோர்களுக்குச் சொல்லாமல்
எண்ணெய்கள் போனபின்பு சத்
திருந்தாலுஞ் சோதித் திடுவதற்கு
எந்த வகைய தென்றால் இதனை
இந்தஉப்புச் சுண்ணமுடன் சீனச்சுண்ணமும்

ஒன்றாக வேகலந்து முன்
உற்றதோர் செயநீரை விட்டதனை
அரைத்து எடுத்தேதான் முன்
அரைத்த சவுக்காரத் துக்குப்பூசி
விளக்கினில் வாட்டவேதான் நயம்
மேவுஞ் சவுக்காரம் வேர்வையைப்போல்
யெண்ணெய்யெல் லாம்வடியும் பின்
னிந்தச் சவுக்கார வெள்ளையிலே

காரசா ரத்தின்வகைகேள் பின்
கரியுப்புச் சுண்ணமும் சினக்காரத்தை
சுண்ணும்ப தாக்கிவைக்கும் நல்ல
சூடன்கட்டிக் காரந் துருசதுவும்
வெள்ளைய தாகுமப்பா கொஞ்ச
மீய்ந்திடப் பஞ்சசு சுண்ணும்பு
மூந்தின செயநீர்விட்டுப் பத
முள்ளிட நன்று யரைத்தேதான் (தந்தன)

விருத்தம்.

அரைத்ததோர் மருந்துதன்னை அதில்யெண்ணெய் வாங்கிவைத்த
கருத்துரை சவுக்காரத்தைக் கவசமாய்ப் பொதிந்தபின்பு
உரித்தான உவர்மண்ணுள்ளே உற்றதோர் கவசம்வைத்துச்
சிறக்கவே யெருவைப் போட்டுத் திடங்கோழிப் புடமாய்ப் போடே.

வேறு விருத்தம்.

போட்டபின் னாறி நீறிப் போனபின் புடத்தைப் போர்த்துச்
சூட்டிடுங் கவசத் தோடு சுண்ணமா யிருக்குமப்பா
வாட்டங்க ளில்லை யிந்த வருசவுக் காரச் சுண்ணம்
பூட்டிய உப்பி னாலே புகழ்பெற்ற குருவா னோர.

வாத வேதைசெய்யும் முறை.

நொண்டிச் சிந்து

சவுக்காரச் சுண்ணும்பும் சுண்ணந்
தானுஞ் சரியிடையாய் மஞ்சாடி
வீதமொடு துருசுக்குப் பூசியே
வெயிலிலே ரெண்டுநாள் தானிருக்க
சுண்ணும்ப தாயிருக்கும் அரிதாரச்
சுண்ணம் சவ்விரம் பொரிகாரம்
இந்தமுறை வீதமப்பா சுண்ண
மென்கிற பதினெரு சுண்ணும்பும்

ஒவ்வொன்றாய்த் தானெடுத்து பின்பு
உற்ற சரியிடையாய்த் துண்டுதுண்டாய்
வகைவீதம் பொடிபண்ணி அதை
வளமாகத் தேங்காய் தன்னிலேதான்

கொள்ள வொன்றாய்ப் போட்டரைக்க இது
குருவாகி குருவாகும் வேதையப்பா
மஞ்சாடிச் சுண்ண மெடுத்து வீரம்
வங்கமுங் காரமுடன்ரசமும்

நிமிளை மனோசிலையும் நாகம்
நிகரிலா லோகந்தங்கம் சுண்ணம்பாம்
ஒன்பது சுண்ணம்புக்குஞ் சரிவீதம்
ஒன்பது களஞ்சி சுண்ணம்பு மொன்றாய்
கூட்டிக் குருவொருமா சேர்த்துக்
கூட்டிநவச்சாரங் களஞ்சுகூட்டிப்
பீங்கானில் வைத்திருக்க அது
பேதமில் லாமலே மூன்றுநாள்
ஏமஞ்செய்யு முறை.
தண்ணீ ரதாங்காந்தம் நாகம்
தண்ணீராம் லோகமுந் தண்ணீராம்
தாளகச் சுண்ணமதைக் கொஞ்சங்
தனிவெள்ளி யிற்கொடுக்க ஒன்பதரை
மாத்தது தப்பாது சுண்ண
மனோசிலையில பற்பம் ஒருமாவிடை
செம்பு தனிற்சேர்க்க வய
தெட்டரை தீர்க்கமப்பா லோகச் சுண்ணம்

தன்னைக்கா ரியமுருக்கும் முகத்தில்
தானீயப் பத்தரை தப்பாது
சவ்வீரச் சுண்ணம்பு வெள்ளீயங்
தனிலீய வெள்ளிக்கு வயததுகேள்
சொல்லுகி றேன்வேதை வெகு
சுகமா யிருபத்தைந்து மாற்றாகும்
இந்தவெள்ளி தன்னிலேதான் காந்தநீரை
இனிமையாய் வேதை முகங்கொடுக்க

சத்தியண்ட பேதியப்பா இதுவெல்லாந்
தானே யெனதுமன தாரக்கண்டேன்
பொய்யல்ல மெய்காணும் ஒருவன்
பொய்யென் றிதனைச்சொல் வானானால்.
சண்டைக்குத் துசங்கட்டுவேன் வாயினிற்
சரியான மண்ணடித்து மண்டையுடைப்பேன்
என்வேதை யணுவளவு பொய்
யில்லையென் றேதுசங் கட்டிவிட்டான்

சித்தர் முனிவர்களும் ரிஷிகள்
செய்வேதை யெதுவேணும் பொய்த்தாலும்
இரவிமதி தெற்கு வடக்கு ஆனாலும்
என்வேதை யொருக்காலுந் தப்பாது
பொய்யல்ல உண்மையறியச் சிவனறியப்
புவியோர் மெச்சக்குரு தானறியச்
செகத்தோர்க்குச் சொல்லிவிட்டேன் வகையுடன்
செய்து முடித்துக்கொண்டு தெரிந்திடுவாய்

குமரிகற்பம்

அற்புதம தாகவொரு மருந்து
அரைகிறேன் இன்னதென்று தெரிந்துகொள்ளும்
கற்பமொன்று விள்ளுகிறேன் நல்ல
கற்றாழஞ் சோறெடுத்து விஸதாரமாய்
திரிகடுகு பொடிபண்ணி வெருகடி
தீர்க்கமுடன் கற்றாழஞ் சோற்றுடனே
பிரட்டியே தின்றுவரக் காயம்
பிலக்குமப்பா நரை திரைமாறும்

சித்தருக்குச் சித்தனப்பா பர
தேசியர்க்குப் பர தேசிகனும்
ஞானிக்கு ஞானியப்பா அஞ்
ஞானிக்கஞ் ஞானியாய்த் தோணுமப்பா
இல்லத்துக் கில்லனுமாய்க் கோடிவய
திருப்பான் பதினாறு வயததுபோல்
இதுவொரு வருடங்கொண்டால் இவனுக்
கிப்பிறவி போகப்பிற் பிறவியில்லை

தேவலோகம் நாகலோகம் முழுதும்
தேவ னிவனென்றே செப்பலாகும்
நேராகவே தோன்றும் மல
நீர்விட்ட இடங்களில் வர்ணம்பேதிக்கும்
அமிர்தம் ரசத்தைக்கட்டும் அவன்
அவனியிற் பேர்பெற்ற சித்தனப்பா
தலைமே லிருக்குகற்பம் அதற்கு
தானே சிறகுமுண்டு வாலுமுண்டு

### யோகிகள் தெரியாமல் செய்யும் வழி.

பிறக்கும்போ தடைத்ததப்பா இனிப்
பின்னிறந்து போகும்போது திறப்பதில்லை
அரைக்கத வுள்வாசல் ஐந்தும்
அடைத்ததைத் திறந்தா லிருப்பார்கள்
சித்த ரிஷிகளெல்லாம் யோகத்திற்
கிடங்கொண் டிருப்பார்கள் சடம்போட்டுத்
தலைகீழாய் நின்றுபார்ப்பார் கழுத்துச்
சரத்திற்குங் காலுக்கும் ஒன்றாய்மூடி

கண்ணிரண் டையுமூடிக் கிடந்து
கலையமு தம்முதிக்கு தில்லையென்று
பூதத்தைப் பின்னுங்காலுப் பெருவிரலைப்
பொருந்தவே கட்டியதை மாறிப்பிடித்து
திட்டியி லுற்பார்ப்பார் யோகத்
திருந்துமே நோக்குவா ரிரவுபகல்
உற்பன கபாலவாசல் திறக்க
ஒற்றைக்கால் தவசிருந் தொருகாலை

மேற்றாக்கிக் கழுத்துக்குள்ளே அமுக்கிக்கை
விரைவாகப் பெருவிரலில் பூமியிலூன்றித்
தவமது செய்திருப்பார் யோகந்
தான்செய் திருந்திடினும் அமுதம்வரா
மண்டலம் ஆகாரம் அருந்தாமல்
வத்தி வரண்டுமேனி யுலர்ந்திருப்பார்
சிரத்தில் வருமமுதம் பின்னுஞ்
சீராய்க் கபாலவழி வீழாது

### சுளிமுனை திறந்து அமுதகற்பம் மிறங்க விதி.

இப்படிக் கொற்ற அமுதம் உதிரத்தி
லிறங்கிடும் வகையொன்று சொல்லுகிறேன்
ஆவின்நெய் சுத்தநெய்யாய் கரிலரைக்கால்
அன்பாகப் பீங்கானதனில் வைத்து
கரிப்பான் சிணிங்கியுடன் பிடிங்கிக்
கற்பமது கொள்ளுதற்கு நன்றாயரைத்துச்
தேங்கா யளவுருட்டி நெய்யுடன்
சீனிக்காரம் கொஞ்சமிட்டு அடுப்பேத்தி

மெழுகு பதத்திறக்கி வடிகட்டி
வியப்பாகப் பீங்கானில் விட்டுநன்றாய்
வண்டுகட்டி வைத்துக்கொண்டு சிவனை
மனதில் தியானித்துப் பத்தியதாய்ப்
உதையந் தனிலெழுந்து பருத
யுதிக்கமுன் காலைக் கடன்முடித்து
யோகமது புரிந்து யெங்க
ளுமையாளைப் பிரதட் சணம்புரிந்து

கற்ப மதையெடுத்துக் கிழக்குமுகங்
கட்டாக வேயிருந்து திட்டமுடனே
பரமனை மந்திரத்தால் தியானித்துப்
பண்பாகச் சிவாசிவா வென்றுசொல்லி
வலதுகைப் பெருவிரலால் அம்மையை
மந்திரத்தாற் செபித்து விந்தையுடனே
இடமது மேல்வாசல் கண்டு
இனிமையாய்த் தொட்டுவைநீ வாசலினில்

வலங்கொண்டு சுற்றிவர ஆறுதடவை
வண்மையுடன் தொட்டுத் தொட்டு வாசலிலே
நலமுடன் தான்தடவிப் பின்பு
நன்மையுடன் குகைவாசல் தன்னிலேதான்
தடவின பின்புதானே ஒரு
சாமமட்டும் பட்டினியா யிருந்து
திடமுடன் அப்பாலே பசிதீரத்
திறமுடன் சாப்பிடலாம் உறவுடனே.

பத்தியம் புகைபுளியைத் தள்ளிப்
பசுவின்மோர்விட்டுச் சாப்பிடலாம்
மத்தது ஆகாது ஒரு
மண்டலங் கழித்தபின் பத்தியமில்லை
கற்பமதைக் காலமேதான் மண்டலங்
கணக்காக வலமாகத் தடவிவர
மேற்வாசல் திறக்குமப்பா இன்னம்
வேண்டிய விதிகளுஞ் சொல்லுகிறேன்

கால்மண்டலங் கழித்தால் தனியே
கதவு திறக்குமப்பா பூட்டுகள் விட்டுத்
திறந்து ஒருவாசல் அமுதம்
சிந்தியே வரும்பின்பு நாலுவாசலும்

ஒருமண் டலந்தடவ நாலுவாசு
லுடனே திறந்துவிடுந் திடமுடனே
பொய்யல்ல மெய்யிதுவும் செய்தறிந்து
புகழுடன் யாருக்குஞ் சொல்லாதே!

மண்டல மொன்றுகொள்ள இடையிலே
மறந்து விடாதே சொன்னேன் திறந்தகதவு.
உறைந்தங்கே யடையுமப்பா தேவ
ரும்பர்க ளாலுமிதை விள்ளப்போமோ
கதவு திறந்தபின்பு நீயுங்
கட்டாய மாய்வூது திட்டமுடன்
இறவாமலே யிருக்கக் கற்பவகை
இயம்பினேன் திருமூல ரருளாலே

கொங்கணவர் கொண்டதோர் கற்பம் இதனைக்
குவலயத் தோர்களும் அறியார்கள்
காசினியி லுள்ள சித்தரும் தெரிந்து
கற்பமது தடவியே விற்பனர்களாய்
இறவாம லிருந்துவிட்டார் கற்பத்தால்
இருந்தாரே கோடி ரிஷிகளுந்தான்
பேருபெற் றரிவர்கள் வெகு
பிரபல மாயிருந்தார் கிரிதனிலே

கற்பந் தெரியாமல் இந்தக்
காசினிதன்னிலே யோகியென்று
பெண்ணுரைை தனில்விழுந்து புவியிற்
பெரியோ னெனவே பேரும்வைத்து
சடைமுடி தான்வளர்த்துக் காவிகள்
தானணிந்து யோகத் தண்டும்பிடித்துக்
காதிற் குழைபூண்டு விபூதியைக்
கணக்காக யுத்தள மாய்ப்பூசி

உலகில் வயிர்வளர்த்து இறந்து
உடனே பிணமாகிச் சடத்தைவிட்டுப்
போனார் வெகுபேர்கள் நல்ல
புத்திகெட்ட மடையரின் பேச்சைகேவிட்டுப்

மாதர் மயக்கம்விட்டு வீறி
வல்லவர்கள் தன்மயமாய்ப் பரமனிடம்
நின்று பிறந்தாக்கால் வெகு
நிச்சய மாகவே கற்பங்கொள்வார்

புத்திதான் மடையருக்குச் சொன்னால்
புத்தி வருமோவொரு நாளும்வராது
ஆயிரத்துக் கொருவனுமாய்ப் பிறந்து
அஞ்ஞானங் கடந்துமெய்ஞ் ஞானத்தடைவான்
சித்தராய்த் தானிருப்பான் ராச்சியத்திற்
செகஜால னுயிருந்து உலகோர்க்கு
மருந்துகள் கொடுத்திடுவான் உலகில்
வல்லசித்த னென்று பேரும்பெறுவான்

இப்படியா யெல்லோரும் சித்தனு
யிருந்தால் கைலேயிலிடமேது
என்றுதா னீஸ்வரனுர் கற்பத்தை
இகத்தோர்க ளறியாமல் மறைத்துவைத்தார்
கற்பத்தை யறியாமல் வெகுபேர்
காலத்தைப் போக்கியே செத்தார்கள்
உரிவெண்ணெய் யறிவாரோ நல்ல
உற்பன கபாலமது கற்பமாமென்றே

சரியாய்த் தெரியாமல் பேரின்ப வீட்டைத்
தானறி யாமல்வன வாசங்களுற்று
மாறிவரும் வாசியைக் கொண்ட யோகம்
வருந்தியே முடித்தார் பொருந்தியேதான்

விருத்தம் - சிவவாக்கியர் பாடல் சந்தம்.

மூலமாங் குளத்திலே முளைத்தெழுந்த கோரையைக்
காலமே யெழுந் திருந்து நாலுகட் டருப்பீரேல்
பாலனுகி வாழலாம் பரப்பிரமமு மாகலாம்
ஆலமுண்ட கண்ட ராணை அம்மை யாணை யுண்மையே

திருமூலர்——பாடல் சந்தம்.

கண்ணுக்கு மூக்குச் செவிஞானக் கூட்டமதிற்
பண்ணுக்கிவைத்த பழம்பொரு ளொன்று உண்டு
அண்ணுக்கி னூடே யகண்டவெளி காட்டிப்
பிண்ணுக் கீசன் பிழைப்பித்த வாறே

சித்தர்கள் காக்ஷியைச் சொல்லுதல்

எண்ணு யிரவருட மிருந்தார் சிவயோகி
பெண்ணு ருடனே பிரிவி விரட்டிப்பாய்
உண்ணு மலைச்சிவனுர் யோகமது வாய்க்கும்
விண்ணோர்மங் கையரை மேவினூர் யுகமே

யுகந்தப்பிப் போனு ருற்றஉப மன்னியர்
செகம்பொன் வரையிற் றிடங்கொண் டிருக்குறார்
சுகங்கள் பொருந்திய சூழ்போக நாதர்
மகன் கொங்க ணுேடு வரையிலிருக்கிறோம்

இருக்கிறோம் சட்டை நாதர்கோ ரக்கர்
பெருக்கிய வாசானைப் பேசி யிருந்தோம்
உருக்கிடு போக ருற்றிடு யுகத்தில்
கருக்குள மாதர்கள் கலியில்மா றுவரை

கலியுக தர்மஞ்சொல்லுதல்.

கலியன் வந்தானென்று ககன ரிஷிகளும்
கலியனைக் கண்ணிலுங் காணுதிருக்க
கலியனை விட்டுக் கயிலைக்குச் சென்றே
கலியுக மட்டுங் கடுந்தூக்கங் கொண்டார்.

தூக்கங்கொள் ளென்று துணிந்தார்கள் யோகம்
ஆக்கங்க ளோடே அரைநா ழிகைதான்
காக்கவே அங்கு கலியுக மட்டும்
வைக்கம தாகத் துறங்கினூர் தாமே

நாமே கலியுகம் சென்றபின் தூக்கும்
தாமே தெளிந்து தரையில் வருவோம்
ஓமே திரேதா யுகந்தனில் வந்து
பாமேவு நாத ரடிபணிவோமே

பணியெனக் காலங் கலியுகம் பாரில்
பணியவர் சிந்தனை பாரி லடங்கா
பணியெனச் சொல்வார் பாரினிற் பெண்கள்
பணியநற் கற்புடைப் பாவையர் தாமே.

பாவையர் தாமும் பகர்மண வாளரும்
ஆவ லுடனே அவர்க ளிருப்பது
சாவலுங் கோழியுந் தானது போலப்
பாவங்கள் பெற்றது பார்க்கவொண் ணாதே

பார்க்கவொண் ணாத பிரமச் சத் திரியரும்
தூர்க்கப் படாத சூத்திரர் வணிகரும்
பார்க்கப் பதினெண் சாதியு மொன்றே
ஏற்கைபா யவர்க ளிருந்துய்வாரே.

உய்வார் பதினெண் சாதியு மொன்றாய்
செய்வார் விவாகந் திறமையதாகத்
தேர்ய்வா ரவரவர் தொல்புவி யெல்லாம்
கொய்வா ரமுதங்கள் குடித்திடு வாரே.

கள்ளைக் குடித்துக் கண்க்குக்கு மேலாய்
மெள்ளத் திரிந்து வேடிக்கை யாக
மன்னர்களோடு மகிழ்ந்து இருப்பார்
உள்ள படியா யுரைத்தேன் கவியை.

சித்தர்கள் குகையி லிருக்குதல்.

நொண்டிச் சிந்து

அடுத்துக் கலியுகத்தில் கொடிய
அநியாயம் மெத்த நடக்குமென்று
விடுத்துநான் சொல்லி விட்டேன் இந்த
மேதினி யிருக்கநீதி யில்லையென்று
நீதியில்லாக் கலியுகந்தான் தீரும்வரை
நிஷ்டை யிலிருந்துவிட வேணுமென்று
பாதிமதி யணியீசன் திருவடி
பதமல ரடியினி லிருந்திடவே

என்குரு போகநாதர் காலாங்கி
இன்ப முறும்நந்தி திருமூலர்
தன்மையுள்ள சட்டைமுனிவர் சுந்தரர்
தன்வந்திரி இராமதேவர் மச்சமுனிவர்
கொங்கணர் தன்னுடனே அனேகரிஷி
கூடியே கயிலாச கிரியில்வந்து
அங்கங்கு குகைகள் செய்து இருந்து
அருந்தவத் தோடுநிஷ்டை புரிந்துகொண்டு

இருந்தார் குகைதனிலே கலியுகம்
எப்படியும் போகட்டு மென்றேதான்
திருந்துங் கிரேதா யுகத்தில் வெளிப்பட்டுத்
தீர்க்கமுடன் வந்திடுவர் ஏற்கையுடனே
ஓயிலாய்ச் சதுரகிரி மத்தியிலே
உற்பனம தாயமைந்த மேருகிரி
கயிலாச கிரியோரம் சந்திரகிரி
கப்புறம் பரமகிரி சூரியகிரி

கும்ப கிரியெனவும் நீலகிரி
கூடுஞ்சஞ் சீவிகிரி வெள்ளிகிரியும்
நம்புகின்ற பிர்மகிரியும் சந்திரகிரி
நாட்டும் வைகுண்டகிரி குபேர கிரியும்
சித்த கிரியதற்குப் பக்கமதிற்
சிறப்பா யமைந்தகை லாசகிரியின்
மத்தியி லேதானும் சித்தர்கள்
மகாதவத் தோடு வாசமுற்றார்.

கும்பகிரி தனிலே சிறந்த
குருமுனி வர்தனியே புடவுசெய்து
அம்புவி யோர்மெச்சும் பொதிகை
யதிலிருந் தேயொரு வழிசெய்து
புலஷ்தியர் தன்னுடனே நிஷ்டை
பூண்டிருந் தாரெங்க ளாண்டவனும்
தலத்தி லுயர்ந்ததென்று சதுரகிரி
தன்னிலிருந் தார்சித்தர் நன்னயமுடன். (தனம்)

பனியெனக் காலங் கலியுகம் பாரில்
பணிபவர் சிந்தனை பாரி லடங்கா
பணியெனச் சொல்வார் பாரினிற் பெண்கள்
பணியநற் கற்புடைப் பாவையர் தாமே.

பாவையர் தாமும் பகர்மண வாளரும்
ஆவ லுடனே அவர்க ளிருப்பது
சாவலுங் கோழியுந் தானது போலப்
பாவங்கள் பெற்றது பார்க்கவொண் ணதே

பார்க்கவொண் ணாத பிரமச் சத் திரியரும்
தூர்க்கப் படாத சூத்திரர் வணிகரும்
பார்க்கப் பதினெண் சாதியு மொன்றே
ஏற்கைபா யவர்க ளிருந்துய்வாரே.

உய்வார் பதினெண் சாதியு மொன்றாய்
செய்வார் விவாகந் திறமையதாகத்
தெர்ய்வா ரவரவர் தொல்புவி யெல்லாம்
கொய்வா ரமுதங்கள் குடித்திடு வாரே.

கள்ளைக் குடித்துக் கண்க்குக்கு மேலாய்
மெள்ளத் திரிந்து வேடிக்கை யாக
மள்ளர்களோடு மகிழ்ந்து இருப்பார்
உள்ள படியா யுரைத்தேன் கவியை.

சித்தர்கள் குகைளி லிருக்குதல்.

நொண்டிச் சிந்து

அடுத்துக் கலியுகத்தில் கொடிய
அநியாயம் மெத்த நடக்குமென்று
விடுத்துநான் சொல்லி விட்டேன் இந்த
மேதினி யிருக்கநீதி யில்லையென்று
நீதியில்லாக் கலியுகந்தான் நீரும்வரை
நிஷ்டை யிலிருந்துவிட வேணுமென்று
பாதிமதி யணியீசன் திருவடி
பதமல ரடியினி லிருந்திடவே

என்குரு போகநாதர் காலாங்கி
இன்ப முறும்நந்தி திருமூலர்
தன்மையுள்ள சட்டைமுனிவர் சுந்தரர்
தன்வந்திரி இராமதேவர் மச்சமுனிவர்
கொங்கணர் தன்னுடனே அனேகரிஷி
கூடியே கயிலாச கிரியில்வந்து
அங்கங்கு குகைகள் செய்து இருந்து
அருந்தவத் தோடுநிஷ்டை புரிந்துகொண்டு

இருந்தார் குகைதனிலே கலியுகம்
எப்படியும் போகட்டு மென்றேதான்
திருந்துங் கிரேதா யுகத்தில் வெளிப்பட்டுத்
தீர்க்கமுடன் வந்திடுவர் ஏற்கையுடனே
ஒயிலாய்ச் சதுரகிரி மத்தியிலே
உற்பனம தாயமைந்த மேருகிரி
கயிலாச கிரியோரம் சந்திரகிரி
கப்புறம் பரமகிரி சூரியகிரி

கும்ப கிரியெனவும் நீலகிரி
கூடுஞ்சஞ் சீவிகிரி வெள்ளிகிரியும்
நம்புகின்ற பிர்மகிரியும் சந்திரகிரி
நாட்டும் வைகுண்டகிரி குபேர கிரியும்
சித்த கிரியதற்குப் பக்கமதிற்
சிறப்பா யமைந்தகை லாசகிரியின்
மத்தியி லேதானும் சித்தர்கள்
மகாதவத் தோடு வாசமுற்றார்.

கும்பகிரிதனிலே சிறந்த
குருமுனி வர்தனியே புடவுசெய்து
அம்புவி யோர்மெச்சும் பொதிகை
யதிலிருந் தேயொரு வழிசெய்து
புலஷ்தியர் தன்னுடனே நிஷ்டை
பூண்டிருந் தாரெங்க ளாண்டவனும்
தலத்தி லுயர்ந்ததென்று சதுரகிரி
தன்னிலிருந் தார்சித்தர் நன்னயமுடன். (தனனம்)

விருத்தம்.

கலியன்வந் தூற்றால் காசினி தனிலே
வழியாரு மில்லை மக்களுமில்லை
சலியாமற் பாவந் தான்செய்கு வார்கள்
மலிவா யுனக்கு வகுத்துச்சொன் னேமே.

சொன்னமுன் வாசல் சூஷ்திரத் திற்பை
நன்றாயெடுத்து நான்சொல் லுகையில்
அன்றே கலியன் யாபகம் வந்து
சென்றே யெடுத்துச் செப்பினேன் நானே

சித்தர்களுக்குப் புத்திகூறல்.

செப்பினது போல் சித்தர்கள் நிலையும்
இப்புவி யோர்க்கு யெடுத்துக் காட்டி
எப்பொரு ளுக்கும் இதுமேல் வாசல்
முப்பொரு ளிதுவாய் முடித்துநீ கொள்ளே.

கொள்வார் கற்பம் கூறும் வகையாய்க்
கொள்வா ராகிற் கோடி யுகமாய்த்
தள்ளுவார் யுகத்தைச் சாவுகள் போச்சு
மெள்ளவே கபால மேல்வாசற் செய்தியே.

இஞ்செய்தி யப்பர் லியம்பக் கேள்நீ
வஞ்சியராசை வையா தெப்போதும்
பஞ்ச வாசல் படீரெனத் திறந்துபின்
மிஞ்சிய வனிதையை மேவலாம் பாரே.

மேவுவ தல்லாள் வினைநினை யாதே
சாவில்லை சொன்னேன் தரணியுள் ளோர்க்குப்
பூவினில் நாரும் பொருந்தி யதுபோல்
நாவியில் லாது நரைதிரை மாறுமே.

மாறுவதோடு வரும்பசி யற்று
தோறுஞ் சரீரம் சொக்கச் சிவக்கும்
ஊறிய அமுதம் உபரசங் கட்டும்
நீரிலும் நடக்க நிசம்வல் லோரே

வல்லவ ராவர் வயது கணக்கில்லை
வல்லார் நுடைய மலமூத்தி ராதிகள்
பல்லா யிரலோகம் பட்டிடம் பழுக்கும்
கல்லாத வித்தையுங் கற்றுணர் வீரே.

## தேவதாளி கற்பம் சாப்பிடும் விதி.

தேவதா ளியின்றன் கற்பம் சேர்பூர்வத் தட்டமியும்
தாவுள்ள சுக்கில பட்சஞ் சதுர்த்தசி யன்றுதானும்
பாவுள மூலிதானும் படர்ந்திருப் பதிலேசென்று
தோவுள மூன்று முப்பிர தெட்சணம் பண்ணிக் கொண்டே

பண்ணியே நமஷ்கரித்துப் பரிவுடன் மந்தி ரந்தான்
எண்ணியே ஓம்நமோ பகவதே ஈசா
வெண்ணுமே தேவ தாளி நமாய சுவாஹா வென்று
நுண்ணிமை யாகத் தானே நூற்றெட்டு உருச்செபிப்பாய்

சேபித்தே செய்வேத் தியங்கள் சிறப்புடன் தீப தூபம்
பாவித்தே வடக்கு நோக்கும் பண்புடன் வேர்பிடுங்கி
சீவிக்க சூரணஞ் செய்து சீர்புதுக் கலசத்திட்டு
ஆவிக ளகலா தற்கு அதுவெரு கடியெடுத்தே

வெருகடி தன்னை நெய்யில் விசையுடன் குளப்பிக் கொண்டு
ஒருதரம் மண்டலங்கொள் உற்றதோர் தேகசித்தி
வருடமோ மூன்று றப்பா வச்சிர தேகங் கண்டாய்
புருடரிற் காம னொப்பாம் புதுமையாம் புவியி லோர்க்கே

புவியுள்ளோர்க் குண்மையப்பா புகலுவே னின்னங்கேளாய்
சுவியொரு வருடங்கொள்ளச் சுத்தியாஞ் சித்தியாவான்
கவிசுரம் பாடு வான்காண் கெவுனமுங் கதியாய்ப் பாய்வான்
தவியாம லாயிரங்கள் தான்வய திருப்பான் பாரே

## கரிப்பான் கற்பம்.

ஆயிரம் வயதல்லாமல் அஷ்டமா சித்தியுண்டாம்
ஓயவே தோர் கரிப்பான் தன்னை யுதரியே கழுவிப்போட்டுத்
தூயதோர் சாற்றை வாங்கித் தகமுடன் சுண்டக் காய்ச்சி
கேயமாய்க் அன்னுக்கிற்றுன் னேர்மையாய்த் தடவிப்பாரே.

கொண்டிடத் திங்க ளப்பா குறைவில்லை காந்தி யுண்டாம்
பண்டுபா தாளலோகம் பரிவுடன் தெரியுமப்பா
அண்டமே லவனுக்குத்தான் யானையின் பலமுண்டாகும்
உண்டிடு இந்த விதம் ஓரஞ்சு மாதங் கொள்ளே

கொள்ளப்பா பிர்மா விஷ்ணு கோமளை மேவு ருத்திரன்
ஒள்ளியே தேவர் தம்மை உசிதமாய்க் காணலாகும்
வள்ளலே பத்து நூறு மார்க்கத்தில் வருவோர் தோற்றும்
மெள்ளவேயுனக்காய்ச்சொன்னேன்வியப்புடன்நன்றாய்க்கேளே

கேளப்பா வேதைதானும் கிடைத்ததோர் கற்பத்தாலே
நாளப்பா இவனுக்குத்தான் நமனுமே பயந்துபோவான்
வேளப்பா தேகந் தானும் மிகவேதை தங்கந் தங்கம்
ஆளப்பா வச்சிர காயமாகுமே அவனுக்கேதான்

அவனுடல் மூத்திராதி அட்டலோ கங்கள் வேதை
சிவனுட மருகனென சித்தச னிவனென் பார்கள்
தவஉடம் பதனை யிந்தத் தாரணி யுள்ளபெண்கள்
இவனுட னழகினாலே எவர்களும் மயங்கு வாரே

மயங்குவார் தேவலோக ஸ்ரீகளும் மதனனென்று
மயங்குவார் வித்தியாத ஸ்ரீகளும் மகிழ்ச்சி கொள்வார்
மயங்குவார் அப்சர ஸ்ரீகளும் வந்து பார்த்து
மயங்குவார் ரதியிந்திராணி மாதரும் பணிவார் பாரே.

## சூதங்கட்டு முறை.

பாரப்பா சூதங்கட்டப் பட்சமா யொன்று கேளு
வீரப்பா தாளிச் சாறு விட்டுணு கரந்திச்சாறு
சேரப்பா ஒன்றாய்க் கூட்டிச் சுருக்கிடச் சூதங்கட்டும்
ஆரப்பா சொல்லப் போறா ரடையலாம் சித்திபாரே.

## அழுகண்ணிக் கற்பம்.

பாரப்பா தந்தி மூலி பச்சிலை நாலுவர்ணம்
ஆரப்பா அதுக்கே பேர்தான் அழுகண்ணி யென்று சொல்வார்
சேரப்பா யிலைக்கிலேதான் செலம் விழுந் திருக்குமப்பா
சாரப்பா யிலையைப் பார்த்தால் சணப்பிலை போலே தோன்றும்

தோன்றிய மூலி வாங்கச் சொல்கிற வழியைக் கேளு
ஈன்றிய பூருவ பட்சம் இந்தபூ ரணநா ளேகி
நீன்றிய சமூலம் வாங்கி நேர்மைசூ ரணமுஞ் செய்து
ஊன்றியோர் வெருகடிதான் உத்தம நாளிற் கொள்ளே.

கொள்ளப்பா பாலுந் தேனும் கூட்டிடு நெய்யுமேதான்
உள்ளதோர் வருடங் கொண்டால் உற்றதோர் சித்த னுவான்
வன்ளலே புளியுப் பைத்தான் மறந்திடு வெயிலாகாது
கள்ளமாங் காற்று காது கடுங்குகை தன்னைக் காரே.

காற்றுகாப் பத்தியந்தான் கருத்துடன் பசுநெய் பாலும்
வேற்றொன் றுங் கூட்டலாகா விரிநரை திரிகள்மாறும்
மாற்றிடுந் தேகந் தானும் வச்சிர காயமாகும்
நூற்றுக்குப் பத்துப்பேர்கள் நுணுக்கமாய்த் தேருவாரே.

கற்பந்தான் கொண்டார் பூத கணநாதர் கணங்கள் தேவர்
சுற்போசற் போவென் றேதான் சகலருந் தொண்டு செய்வார்
வெற்படை எமனோடு மிருகஜா திகளாற் சாகார்
மற்புள யிரவி கண்ட பனியென வாங்கிப் போவார்

## சூதச் செந்தூரம்.

போவதார் சித்தரெல்லாம் புகழ்பெற்ற சித்தனுவார்
ஆவதோ குருக்குச் சாற்றால் மத்திக்கத் திரளுமப்பா
ஓவதோர் குகைக்குள் வைத்து ஒருசீலை மண்ணுஞ் செய்து
பாவுடன் புடமேபோடப் பழிப்பில்லாக் கட்டியாமே

கட்டின சூதந்தன்னைக் கதிப்புள தகடாய்த் தட்டி
விட்டதிற் பிடங்குநாரி வேர்தனை யரைத்துக் கொண்டு
திட்டமாய்ப் பூசிப் பூசித் திரிபுடம் போட்டெடுக்க
சுட்டதோர் முருக்கம் பூப்போற் சூதஞ்செந் தூரமாமே

செந்தூர மொன்று வெள்ளி யிருபதிற் சேர்க்கவேதான்
மைந்தனே கேளுமப்பா வகையுள பத்து மாற்று
விந்தையாய் ரசத்தைப் பின்னும் விளங்குமிச் சாற்றினாலே
தொந்தமாய் மத்தித் தேதான் சொல்லுவேன் வேதைகேளே

கேளப்பா செம்பிற் றாக்கிக் கிரிகையோர் புடமேபோட
வாளப்பா சுத்தத்தங்கம் பத்தரை மாற்றுக்காணும்
மீளப்பா கெந்திதன்னை விரும்பியிச் சாற்றினாலே
சூளப்பா சுருக்குத் தாக்கச் சுடாமணி யாடும்பாரே

கொண்டிடத் திங்க ளப்பா குறைவில்லை காந்தி யுண்டாம்
பண்டுபா தாளலோகம் பரிவுடன் தெரியுமப்பா
அண்டமே லவனுக்குத்தான் யானையின் பலமுண்டாகும்
உண்டிடு இந்த விதம் ஓரஞ்சு மாதங் கொள்ளே

கொள்ளப்பா பிர்மா விஷ்ணு கோமனை மேவு ருத்திரன்
ஒள்ளியே தேவர் தம்மை உசிதமாய்க் காணலாகும்
வள்ளலே பத்து நூறு மார்க்கத்தில் வருவோர் தோற்றும்
மெள்ளவேயுனக்காய்ச்சொன்னேன்வியப்புடன்நன்றாய்க்கேளே

கேளப்பா வேதைதானும் கிடைத்ததோர் கற்பத்தாலே
நாளப்பா இவனுக்குத்தான் நமனுமே பயந்துபோவான்
வேளப்பா தேகந் தானும் மிகவேதை தங்கந் தங்கம்
ஆளப்பா வச்சிர காயமாகுமே அவனுக்கேதான்

அவனுடல் மூத்திராதி அட்டலோ கங்கள் வேதை
சிவனுட மருகனென சித்தச னிவனென் பார்கள்
தவஉடம் பதனை விந்தத் தாரணி யுள்ளபெண்கள்
இவனுட னழகினாலே எவர்களும் மயங்கு வாரே

மயங்குவார் தேவலோக ஸ்ரீகளும் மதனமென்று
மயங்குவார் வித்தியாத ஸ்ரீகளும் மகிழ்ச்சி கொள்வார்
மயங்குவார் அப்சர ஸ்ரீகளும் வந்து பார்த்து
மயங்குவார் ரதியிந்திராணி மாதரும் பணிவார் பாரே.

## சூதங்கட்டு முறை.

பாரப்பா சூதக்கட்டப் பட்சமா யொன்று கேளு
வீரப்பா தாளிச் சாறு விட்டுணு கரந்திச்சாறு
சேரப்பா ஒன்றாய்க் கூட்டிச் சுருக்கிடச் சூதங்கட்டும்
ஆரப்பா சொல்லப் போறா ரடையலாம் சித்திபாரே.

## அழுகண்ணிக் கற்பம்.

பாரப்பா தந்தி மூலி பச்சிலை நாலுவர்ணம்
ஆரப்பா அதுக்கே பேர்தான் அழுகண்ணி யென்று சொல்வார்
சேரப்பா யிலைக்கில்தான் செலம் விழுந் திருக்குமப்பா
சாரப்பா யிலையைப் பார்த்தால் சணப்பிலை போலே தோன்றும்

தோன்றிய மூலி வாங்கச் சொல்கிற வழியைக் கேளு
ஈன்றிய பூருவ பட்சம் இந்தபூ ரணநா ளேகி
நீன்றிய சமூலம் வாங்கி நேர்மைகூ ரணமுஞ் செய்து
ஊன்றியோர் வெருகடிதான் உத்தம நாளிற் கொள்ளே.

கொள்ளப்பா பாலுந் தேனும் கூட்டிடு நெய்யுமேதான்
உள்ளதோர் வருடங் கொண்டால் உற்றதோர் சித்த னுவான்
வன்னலே புளியுப் பைத்தான் மறந்திடு வெயிலாகாது
கள்ளமாங் காற்று காது கடுங்குகை தன்னைக் காரே.

காற்றுகாப் பத்தியந்தான் கருத்துடன் பசுநெய் பாலும்
வேற்றொன் றுங் கூட்டலாகா விரிநரை திரிகள்மாறும்
மாற்றிடுந் தேகந் தானும் வச்சிர காயமாகும்
நூற்றுக்குப் பத்துப்பேர்கள் நுணுக்கமாய்த் தேருவாரே.

கற்பந்தான் கொண்டார் பூத கணநாதர் கணங்கள் தேவர்
சற்போசற் போவென் றேதான் சகலருந் தொண்டு செய்வார்
வெற்படை எமனோடு மிருகஜா திகளாற் சாகார்
மற்புள யிரவி கண்ட பனியென வாங்கிப் போவார்

சூதச் செந்தூரம்.

போவதார் சித்தரெல்லாம் புகழ்பெற்ற சித்தனுவார்
ஆவதோ குருக்குச் சாற்றால் மத்திக்கத் திரளுமப்பா
ஓவதோர் குகைக்குள் வைத்து ஒருசீலை மண்ணுஞ் செய்து
பாவுடன் புடமேபோடப் பழிப்பில்லாக் கட்டியாமே

கட்டின சூதந்தன்னைக் கதிப்புள தகடாய்த் தட்டி
விட்டதிற் பிடங்குநாரி வேர்தனை யரைத்துக் கொண்டு
திட்டமாய்ப் பூசிப் பூசித் திரிபுடம் போட்டெடுக்க
சுட்டதோர் முருக்கம் பூப்போற் சூதஞ்செந் தூரமாமே

செந்தூர மொன்று வெள்ளி யிருபதிற் சேர்க்கவேதான்
மைந்தனே கேளுமப்பா வகையுள பத்து மாற்று
விந்தையாய் ரசத்தைப் பின்னும் விளங்குமிச் சாற்றினாலே
தொந்தமாய் மத்தித் தேதான் சொல்லுவேன் வேதைகேளே

கேளப்பா செம்பிற் றுக்கிக் கிரிகையோர் புடமேபோட
வாளப்பா சுத்தத்தங்கம் பத்தரை மாற்றுக்காணும்
மீளப்பா கெந்திதன்னை விரும்பியிச் சாற்றினாலே
சூளப்பா சுருக்குத் தாக்கச் சூடாமணி யாடும்பாரே

ஆடிய கெந்தி யொன்று ஐம்பது வெள்ளி தன்னில்
நீடியே போடத் தங்கம் நேர்மையாய்ப் பத்துக்காணும்
நாடிய யிலையரைத்து நாகத்திற் பொதிந்தபின்பு
தேடிய நாகங்கட்டும் செம்புட னுருகும் பாரே.

உருகிய போதுநாகம் ஒன்றிடில் மாத்து எட்டாம்
பெருகிய வீரங் கட்டும் பெலமான வெள்ளியத்தில்
உருகியபோது வீரம் ஒன்றிட வயது தானும்
அருளுட னிருபத் தஞ்சுமாற்றெண அறியலாமே

அறியலாந் தலவாய் துத்தம் அரிதாரஞ் சிலையும் கெந்தி
வெருவிய கெவுரி சிங்கி முடிதாரங் கிரிகைவேண்டி
செருவியே ஓரிடையாய்ச் சேர்த்தரை மூலிச்சாற்றால்
சுருதியா யரைத்து அந்தத் தகட்டினிற் றடவச்சொல்லே

சொல்லென்றார் புடமே போடச் சோதியாந் தங்கச் செம்ப
நில்லென்று நிறுத்துஞ் செம்பு நிசத்தங்கச் செம்பின் வேதை
நல்லதோர் வெள்ளிநூறு நலமதா யுருகும் போது
செல்லவே தங்கச் செம்பு ஒன்றிடச் சதமாம் வேதை

சதமென்று லாயிரத்தெண் மாற்றுமே தப்பாதுண்மை
சதமுள்ள கால மெல்லாம் மூலிகை தப்பா தப்பா
சதமுள யிந்தவேதை தப்பாமல் மூலர் போகர்
சதமுள்ள சட்டைநாதர் கொங்கணர் சதாவுங் கண்டார்

நாகதாளிக் கற்பம்.

கண்டதோர் நாகதாளிக் கடையாளங் குங்குமப்பூ
விண்டதோர் வெற்றிலைபோல் மிகயிலை யிருக்குமப்பா
எண்டிசை யிரண்டு பேராம் இயல்நாகம் போலிருக்கும்
உண்டிடச் சூரணத்தை உசிதமாய்ப் பொடித்துக் கொள்ளே

கொள்ளப்பா பொருந்தும் நாளிற் குணமதாய் வெருகடிதான்
தெள்ளப்பா தேனும் நெய்யும் தினங்கூட்டிக் கொள்ளுமப்பா
எள்ளப்பா நோய்கள் நாலாயிரத்து நானூறுந் தீரும்
வள்ளலே மண்டலந்தான் மகிழ்வுடன் தின்றுபாரே.

தின்றிட நரைகள் மாறுந் திரையது விழுகாதப்பா
டன்றிடா வாயிரந்தான் வயதெனச் சொல்ல லாகும்
நன்றுடன் மூன்று மாதம் நலம்பெறக் கொள்வானாகில்
சென்றிடு சத்தலோகந் தெரியும்பா தாளம்பாரே.

பாரப்பா தேகந்தானும் பரமுள்ள பொன்போலாகும்
காரப்பா சாஸ்திரத்திற் கருத்துள்ளோ னிவனேயாகும்
வாரப்பா அவனைக்கண்டால் வாசுகி யனந்தனோடு
சாரப்பா தட்சன் சங்கு பாலகன் குளிகனோடே

குளிகன் கார்க்கோடன் பற்பன் குலமகா பற்பன் மற்ற
பளிகனு மட்டநாகம் பயந்தது இடத்திற் சேரும்
வெளியதோர் வருடங் கொண்டால் மிகுமகா சித்தனாகி
ஒளியிடுஞ் சுவாசத்தாலே உலகிற்சஞ் சாரஞ்செய்வான்

சஞ்சார தியானத்தாலே தரையெங்குந் திஷ்டி பார்ப்பான்
மிஞ்சியே தேவர் சித்தர் வித்தியா தரர்களோடு
கொஞ்சு கெந்தருவர் மாரன் கூர்கணையாலே கூராய்ச்
சஞ்சீவி சூழ்வாள் சத்தி சதிருள வயதே தென்றால்

வயதது ஆயிரந்தான் மயமுடன் தரிக்கவேதான்
நயமான முனிவர் சித்தர் ஞானிலந் தனிலுள் ளோர்கள்
சுயமதாய் அஷ்ட பாலர் சொல்லுமிந் திராதி தேவர்
செயமதா மரசரோடு ஸ்திரீகளும் வணங்குவாரே.

வணங்குவார் விக்கினங்கள் ஒன்றுமே வாராதப்பா
சணம்பெரு வழியிற் றங்கத்தனிப்பய மில்லையப்பா
குணங்கெடு சோரர் பின்னுங் கொடியதோர் சிங்கம்பூதம்
கணங்கள் வேதாள மெல்லாம் கானகம் புக்கும் பாரே.

சூதநாகக் கட்டு.

புக்கிடுஞ் சங்குசக்ரம் புகழ்நாக பாசஞ் சூலம்
தக்கிடு செப்பாணங்கள் தன்னிலுற்கொல்லப் போகா
கக்கிஷ நாவிச்சாற்றால் ரசமது புடத்திற் கட்டும்
மிக்கதோர் நாகக்கட்டும் மீசோர யரைத்துப் பூசே

ஆடிய கெந்தி யொன்று ஐம்பது வெள்ளி தன்னில்
நீடியே போடத் தங்கம் நேர்மையாய்ப் பத்துக்காணும்
நாடிய யிலையரைத்து நாகத்திற் பொதிந்தபின்பு
தேடிய நாகங்கட்டும் செம்புட னுருகும் பாரே.

உருகிய போதுநாகம் ஒன்றிடில் மாத்து எட்டாம்
பெருகிய வீரங் கட்டும் பெலமான வெள்ளீயத்தில்
உருகியபோது வீரம் ஒன்றிட வயது தானும்
அருளுட னிருபத் தஞ்சுமாற்றென அறியலாமே

அறியலாந் தலவாய் துத்தம் அறிதாரஞ் சிலையும் கெந்தி
வெருவிய கெவுரி சிங்கி முடிதாரங் கிரிகைவேண்டி
செருவியே ஓரிடையாய்ச் சேர்த்தரை மூலிச்சாற்றால்
சுருதியா யரைத்து அந்தத் தகட்டினிற் றடவச்சொல்லே

சொல்லென்றார் புடமே போடச் சோதியாந் தங்கச் செம்பாட
நில்லென்று நிறுத்துஞ் செம்பு நிசத்தங்கச் செம்பின் வேதை
நல்லதோர் வெள்ளிநூறு நலமதா யுருகும் போது
செல்லவே தங்கச் செம்பு ஒன்றிடச் சதமாம் வேதை

சதமென்று லாயிரத்தெண் மாற்றுமே தப்பாதுண்மை
சதமுள்ள கால மெல்லாம் மூலிகை தப்பா தப்பா
சதமுள யிந்தவேதை தப்பாமல் மூலர் போகர்
சதமுள்ள சட்டைநாதர் கொங்கணர் சதாவுங் கண்டார்

## நாகதாளிக் கற்பம்.

கண்டதோர் நாகதாளிக் கடையாளங் குங்குமப்பூ
விண்டதோர் வெற்றிலைபோல் மிகயிலை யிருக்குமப்பா
எண்டிசை யிரண்டு பேராம் இயல்நாகம் போலிருக்கும்
உண்டிடச் சூரணத்தை உசிதமாய்ப் பொடித்துக்கொள்ளே

கொள்ளப்பா பொருந்தும் நாளிற் குணமதாய் வெருகடிதான்
தெள்ளப்பா தேனும் நெய்யும் தினங்கூட்டிக் கொள்ளுமப்பா
எள்ளப்பா நோய்கள் நாலாயிரத்து நானூறுந் தீரும்
வள்ளலே மண்டலந்தான் மகிழ்வுடன் தின்றுபாரே.

தின்றிட நரைகள் மாறுந் திரையது விழுகாதப்பா
டன்றிடா வாயிரந்தான் வயதெனச் சொல்ல லாகும்
நன்றுடன் மூன்று மாதம் நலம்பெறக் கொள்வானாகில்
சென்றிடு சத்தலோகந் தெரியும்பா தாளம்பாரே

பாரப்பா தேகந்தானும் பரமுள்ள பொன்போலாகும்
காரப்பா சாஸ்திரத்திற் கருத்துள்ளோ னிவனேயாகும்
வாரப்பா அவனைக்கண்டால் வாசுகி யனந்தனோடு
சாரப்பா தட்சன் சங்கு பாலகன் குளிகனோடே

குளிகன் கார்க்கோடன் பற்பன் குலமகா பற்பன் மற்ற
பளிகனு மட்டநாகம் பயந்தது இடத்திற் சேரும்
வெளியதோர் வருடங் கொண்டால் மிகுமகா சித்தனாகி
ஒளியிடுஞ் சுவாசத்தாலே உலகிற்சஞ் சாரஞ்செய்வான்

சஞ்சார தியானத்தாலே தரையெங்குந் திஷ்டி பார்ப்பான்
மிஞ்சியே தேவர் சித்தர் வித்தியா தரர்களோடு
கொஞ்சு கெந்தருவர் மாரன் கூர்கணையாலே கூராய்ச்
சஞ்சீவி சூழ்வாள் சத்தி சதிருள வயதேதென்றால்

வயதது ஆயிரந்தான் மயமுடன் தரிக்கவேதான்
நயமான முனிவர் சித்தர் ஞானிலந் தனிலுள் ளோர்கள்
சுயமதாய் அஷ்ட பாலர் சொல்லுமிந் திராதி தேவர்
செயமதா மரசரோடு ஸ்திரீகளும் வணங்குவாரே.

வணங்குவார் விக்கினங்கள் ஒன்றுமே வாராதப்பா
சணம்பெரு வழியிற் றங்கத்தனிப்பய மில்லையப்பா
குணங்கெடு சோரர் பின்னுங் கொடியதோர் சிங்கம்பூதம்
கணங்கள் வேதாள மெல்லாம் கானகம் புக்கும் பாரே.

சூதநாகக் கட்டு.

புக்கிடுஞ் சங்குசக்ரம் புகழ்நாக பாசஞ் சூலம்
தக்கிடு செப்பாணங்கள் தன்னினுற்கொல்லப் போகா
கக்கிஷ நாவிச்சாற்றால் ரசமது புடத்திற் கட்டும்
மிக்கதோர் நாகங்கட்டும் மீசோர யரைத்துப் பூசே

பூசியோர் புடத்தில் நாகம் பொன்போலக் கட்டுமப்பா
பாஷாணங் கெந்தி வீரம் பரிவுடன் சுருக்குத் தாக்கக்
கூசாமற் கட்டுமப்பா குடகரி தன்னிலாடும்
நேசமாய்க் குளிகை யொன்று நிசமதாய்ச் சொல்லக் கேளே.

கேவுன குளிகை.

சொல்லக்கேள் ரசமுங்கெந்தி தூயவப்பிரகத்தோடு
நல்லதோர் மூன்றுமொன்றாய் நாகதே மணியின் சாற்றால்
வல்லதோர் மருந்துதன்னை மகிழ்வுடனே யப்போது
கல்வத்தி லரைத்து ருட்டிக் கட்டியே கொள்ளு வீரே,

கொள்வதே மூன்று சாமம் கூறுடனரைத்தே தானும்
கொள்வதோர் குகையில் வைத்துக் குறித்தொரு புடமேபோட
ஒள்ளியமுடனே அட்டலோகமும் பேதிக்குங்காண்
வள்ளலே வாயுவேகம் மனவேகம் கெவுன வாழ்வே

வாழ்வது மல்லா லட்டசித்தியு மடையலாகும்
தோழ்வில்லை நாட்டில் மாதர் கூட்டத்தே யில்லத்தோடு
வாழ்வதாய் நிலைக்கவேண்டாம் மலமூத்தி ராதிவேதை
தேள்காலி பாம்பிஞேடு கில்விஷ மண்டிடாதே

அண்டிடா விஷஜெந்துக்க ளநேகமா மதிலொன் றேனும்
முண்டியே தின்டிடாது மொழிந்தநல் வாக்குப் பொய்யா
வண்டர்கள் பொய்யென் பார்கள் மகிமையா றறியப்போரார்
தொண்டுசெய் தாசான்மூலந்தொட்டுக் காட்டிடவே தோன்றும்

மலமூத்திர வேதையுண்டாம் வளர்கோங்கின் பூவின்கற்பம்
புல்மையாய்ப் பூசைசெய்து பொடியாக்கி வடியுங்கொண்டு
நலமதாய்க் கவசந் தன்னில் நயமதாய் வண்டுகட்டிக்
குலசித்தி யாகவேதான் கொள்ளப்பா பொருத்தம் பார்த்தே

பொருந்திய நல்லநாளிற் புகழ்வெரு கடியாய்க் கொண்டு
மருந்திடு மாநெய் தன்னில் வளரிரு பதுநாள் மட்டும்
வருந்திடாப் பாலுஞ்சோறும் வளமையாய்ப் பின்னுந் தேனும்
திருந்தவே யிருபத் தேழ்நாள் தின்றிடச் செப்பக்கேளே

செப்பக் கேளப்பா உண்மை தேவர்கள் வயதுண்டாகும்
ஒப்பக்கேள் பூமிதன்னி லுள்ளது வெல்லாந் தோன்றும்
அப்பவே பெலமுண்டாகும் யானையின் மஷ்துண்டாகும்
ஒப்பமாய்ப் பின்னுமந்த உயர்பொடி யுகமைகேளே

உகமைசக் கரைதேன் நெய்யை யொன்றாக ரேசித்தேதான்
மகவனே யொருமா தந்தான் வளமதாய்க் கொண்டபின்பு
சகலமுங் கற்பமப்பா சாதமும் பாலுங்கொள்ள
மிகவரு ளிதுதான் கொண்டால் விஷ்ணுவின் வயதுண்டாமே

வயதுண்டாம் பின்னுங்கேளு மருந்துடன் பாலுங்கூட்டி
மயமிரு பதுநாட் கொள்ள வச்சிரகாயந் தேகம்
வயதுண்டாம் கணங்கள் தேவர் மைந்தனே தெரியும் பாரு
மயமதாய் சோதியான மரத்துட பிசினை வாங்கே

வாங்கிமை பத்தவைத்து வளமான கண்ணிற் போட்டு
பாங்குள்ள தேவரோடு பரமுனி ரிஷிகளோடு
பாங்குட னிதானஞ் சொன்னேன் பணிவிடை செய்வாரப்பா
தேங்க மழமுகு மேவுஞ் சிவனுணை தப்பாதென்றே

என்றதோர் கற்பங்கொண்டா லிருக்கலாஞ் சாகாமற்றான்
நன்றென்ற வாதவித்தை நடக்கவே சரக்கை வாங்கிக்
கன்றிடச் சுட்டுச் சுட்டுக் கரிகொண்ட காசுங்காணார்
மன்றினிற் கற்பங்கொண்டால் மலசலம் வேதை யாமே

வேதைதான் காணவென்றால் மேல்வாசல்பூசைசெய்வாய்
பாதத்திற் சிலம்பு கொஞ்சும் பரைபூசை பண்ணிக் கொள்வாய்
வேதியர் முனிவர் சித்தர் மெல்லடி பணிந்து கொண்டு
நீதமாஞ் சிதம்பரத்தை நித்தமும் பூசிப்பாயே

பூசித்தால் வாதங்காணும் பொன்னவ னடியே தோன்றும்
ஆசையே மிகக்கொடுக்கும் அன்னையும் பிதாமற்றோரைத்
தூசியாய் நினைக்கவைக்கும் சுத்தசைதன்ய மாக்கு
மாசையை மலமாயெண்ணி மலையேறிச் செல்வார் மக்காள்

மக்களே போகநாதர் மறை சட்டைமுனிவரென்றுந்
தக்கதோர் கொங்கணையர் தருமூன்று பேரோடுந்தான்
இக்கணஞ் சொல்லுகின்ற என்னோடு நால்வர் தம்மைச்
சிக்கென இவர்கள் நூலை திட்முடன் பிடிப்பா யப்பா

பிடியப்பா வாதஞ்சித்தி பிறருக்குச் சொல்ல வேண்டாம்
படியப்பா சட்டைநாதர் பாட்டான நிகண்டைப் பார்த்து
குடியப்பா அமுதமென்று கொங்கணர் சொன்ன நூலைப்
படியப்பா முதற்காண்டத்தைப் பாலுடன் பழமதாமே

பளபளப்பான நூலைப் பன்புடன் மனதிற்கொண்டு
நளபாக மிதுதானென்று நன்மையாய் வாதம்பாரு
களவிலாக் கருக்களெல்லாங் கனவிலு மொளிக்க வில்லை
அளவதாய்க் கெந்தகத்தி னுண்மையை யுரைப்பேன் பாரே

வேதைசெய்ய கெந்தக மெழுகு.

பாரப்பா கெந்தகந்தான் பரிவுடன் மெழுகதாகத்
தீரப்பா புதுச்சட்டிக்குள் தெங்காய் நெய்வடித்துவிட்டு
வாரப்பா கத்தரிக்கா யொன்றது வாங்கிக்கொண்டு
பேரப்பா யிரண்டதாகப் பேர்பாதி பிளந்து கொண்டே

பிளந்துள்ளே வைப்பாய் கெந்தி பேதிக்கும் பூமானாலே
இளகிய மெழுகதாக யீரஞ்சு பலமேவைத்துப்
பிளந்திட்ட காயையொன்றாய்ப் பின்பதை மூடிப்பின்னும்
வளமாய்முப் புரியாம் நூலைவாய்பிளக் காமற்சுத்தே

சுத்திநெய்ச் சட்டிதன்னில் தொளாந்திர மாகத்தூக்கிச்
சித்தியா யொன்றேசாமம் தீயெரித்திடவே வெந்து
உத்தமோர் கெந்தகந்தான் உசிதமாய் மெழுகதாகும்
பத்தியாய் வெள்ளிக் கியப் பத்தரை தப்பாதென்றே

துத்தக் கட்டு.

என்றெனக் குமரிச்சாற்று லிசைக்கின்ற உப்புதன்னை
துன்றிட அரைத்து நல்ல துத்தத்துக் கங்கிபூட்டி
நன்றென உமித்தீ தன்னில் நாழிகை யிரண்டுவைத்துச்
சென்றபின் கவசம்போர்த்துத் திடமதா யெடுத்துக் கொள்ளே

கொள்ளப்பா கவசம்போர்த்து மடல்தனைக் கொண்டுநல்ல
தெள்ளப்பா திரிகோணத்தின் சீர்தயிலத்தை பூட்டி
மெல்லவே வெள்ளிதன்னை மேலும்நீ யெடுத்துக் கொண்டு
வள்ளவே களஞ்சிக்கப்பா மஞ்சாடி கொடுத்துச் செல்லே

லிங்க வெண்ணெய்.

செல்லவே மார்த்திராறு தீர்க்கமாம் கடைக்குச் செல்லும்
அல்லவே சாதிலிங்கம் அன்பதாய்க் கட்டுதற்கு
நல்லதோர் நாவிதன்னை நன்றாய்ச்சம் பழச்சாற்றாலே
வல்லப மாயரைத்து மகிழ்பொரிக்காரங் கூரே.

கூருடன் கவசங்கட்டிக் கொல்கையாஞ் சிப்பிதன்னில்
மீரிய கவசம்செய்து வெயில்வைக்க வெண்ணெய் யாகும்
பாருள்ள காரவெண்ணெய் பகர்செந்தி தனக்குப்பூசில்
வீருள்ள கெந்தி வெண்ணெய் விடையின்னஞ் சொல்லக் கேளே

கேளப்பா கெந்திவெண்ணெய் கிருதியாம் லிங்கத்திற்கு
ஏளப்பா பூசிவெய்யி லிருக்கவே விசையாய்க் கட்டும்
நாளப்பா தாளகந்தான் நயமுடன் கட்டுதற்கு
நீலத்தா லம்பழத்தை நிதிபெறக் கொண்டுவந்தே

பள்ளுச் சந்தம்.

வந்தீரோ அகப்பட வந்தீரோ
மாசகலாமலே பாசங்களற்றிட
இந்தநே ரந்தன்னில் விந்தையதாகவே
பந்தபாசம் நீக்கச் சிந்தை மகிழ்வொடு

வந்திடும் பழம்படியரை யாகவும் ஆறு
மாத்தைக் காடிதா னொருபடி யாகவும்
தொந்தமதாகவே பழத்துடன் காடியைச்
சுகமாக விட்டதை இடித்துச் சாரெடுத்து

சுருக்கிட அரிதாரந் துடிகளடங்கவே
தோய்த்துத் தோய்த்து அதைப்பின்னுஞ் சுருக்கிடப்
பெருக்க யிருந்தசாறு சுருக்கமதாகவே
பேணியே சுருக்கிட அரிதாரங் கட்டிடும்

தண்ணியி லுப்புதன்னை தண்ணீரி லேகரைத்துச்
சரியாக வேஅதனைத் தானே தெளியவைத்து
தண்ணீர்க்குச் சரியான கரியுப் பதையரைத்துத்
தடையின்றிக் காடையோர் புடமிடக் கட்டிடும்

கட்டின உப்பதனை யரைத்துக் குகைபிடித்துக்
கதிப்பான கெந்தியை யரைக்களஞ் சியெடுத்துத்
திட்ட முடன்மடல்த் துருசும் அரைக்களஞ்சு
சேரவொன் றாக அரைத்துப் பொடிசெய்து

பொடியைக் குகையில்வைத்துப் புகழும் நாகம்நடுவே
போட்டுக் குகைவாயில் சீலைமண் ணுஞ்செய்து
சடிதியா யுமியோட்டில் தானதை வைத்தூதச்
சரியா யுருகிக்கட்டும் சரியாகக் கட்டாட்டால்.

வருங்காரங் கூட்டியே மலைக்கரி களைப்போட்டால்
வகையாக யுருகிக் கட்டும் வையகத் தோருக்கும்
ஒருவர்க்குஞ் சொல்லாதே உண்மை யிதுவப்பா
உலகத்தி லிதைச்சொன்னால் கொடிய பாவம்வரும்.

கெந்தகத்தயிலம்-வெண்பா.

தாரமொருகளஞ்சி கெந்தகமோ தான்களஞ்சி
சேரப் பொடிசெய்து செப்பக்கேள்—பாரே
புதியதொரு வோட்டிற் பொடியதனை வைத்தூத
அதிகமுள தாந்தயில மாம்.

தயிலமதி லேதான் சாதிலிங்க மோர்களஞ்சி
ஒயிலாய்ப் பிரட்டி யுணர்ந்தால் —நயமாகக்
காந்தமோ ரோர்களஞ்சி கன்னிகைச்சாற் றால்ரைத்துத்
தீந்த கவசமிட்டுச் செல்.

கவசம் பொதிந்தபின்பு காரணச் சீலைமண்
அவசம் வாராமலதைக் கட்டிக்—கெவன
உமிப்புடமே காடை யொருபுடமே போட்டுக்
கமழாமல் லிங்கமது கட்டும்.

கட்டுமப் பாமடையன் கட்டக்கே ளுத்தமனே
மட்டுக்கடங் காவழுரி வாங்கியே—திட்டமுள்ள
மஞ்சளரைத் துக்கலக்கி நாலுநா ளூறமடல்
துஞ்சவே போட்டுவிடச் சொல்.

போட்டமடலெடுத்துப் போதமுள்ள சூடனைத்தான்
ஆட்டியே மேற்கவச மாக்கிப்பின்—காட்டிலுள்ள
உள்ளிக் கிழங்குள்ளே உற்ற கவசமிட்டுத்
தெள்ளியதோர் சீலைமண்ணுஞ் செய்.

சீலைமண் செய்தே திறமாய் மூழப்புடந்தான்
சீலமுடன் மூன்றுபுடஞ் சென்றிடவே—ஞாலமுடன்
கந்த மடையனுட கட்டெவர்க்கும் வாராது
விந்தையுள்ள செம்பினிலே வேதை.

வேதாந்த நாடகச் சந்தம்.

வேதையாம் இதுகல்ல
வேதையாம் செய்த
வேதை யிதுவென்று விண்ணோர் களுமயங்க
ஆதியில் நான்செய்த அருமை யாகியதொரு (வே)

வேதைய தாமண்ட மெழுகா கிடும்பா
ஓதும் பதினிதனை யொருபடி போல்வாங்கிப்
போத முள்ளதொரு புதுசட்டி தனில்விட்டு
நீதம தாகவே நேர்மை யுடனேவைத்து. (வே)

பேதியா தொருஅண்டம் வைத்துப்பின் னுங்கேளு
போத வெடியுப்புக் களஞ்சி நாலும்வாங்கிப்
பதிவான நமச்சாரம் பதமா யிந்தயிடை
பாரில் வளர்பூரம் யிந்த யிடையெடுத்து. (வே)

ஈராறு களஞ்சிய மாட்டிப்பொடி செய்து
இசைவாய்ப் பதினியிலே யிட்டுயிதைக் கிண்டி
வாரமுடன் சீலைசெய்து கட்டி நன்றாய்
வளமாய்க் கதிர்முகத்தில் வத்தவே வைத்திட (வே)

வைத்தபதினி யெல்லாம் வத்திப்பின் னுழக்காகும்
வளமாய் மெழுகாகும் மாகுருவைக் கூட்ட
மெத்தவெடியுப்பு வீரனும் மெழுகாகும்
மீதில் நாகவேதை யொன்பதரை காணும் (வேதை)

## விருத்தம்

திருசது வெந்து நீறும் துடியுள்ள வீரன்றனும்
வருசையாய்ச் சூதமொன்றும் வகைசரி யிடையாய்க் கொண்டு
திருசது மெழுகை மாட்டித் தோன்றிடச் சீலமண்செய்
பருசமாங் காடையப்பா புடம்ரச மணியதாமே.

## பள்ளுநாடகம் வெண்ணிலாவே யென்று சந்தம்.

திருசு மூன்றுகளஞ்சு ஒருகட்டி யாய்வாங்கி அய்யா-நல்ல
துவர்ப் பாக்கு வெற்றிலை சுண்ணமும் போட்ட நீரையா
அரைத்துப் பணவிடை கற்பூரங்கூட்டிடு அய்யா-நீ
ஆதித்தன் முன்பாக மூன்றுநாள் வைத்திடு அய்யா

நாலாநாள் கவசத்தை வாங்கிவிடு சொன்னேன் அய்யா - நல்ல
நாகங் களஞ்சியுந்தான் உருகும்போது விடு அய்யா
பாலான வெள்ளைப்பா ஷாணமவ்விடையதாம் அய்யா-அதைப்
பண்பாய்ப் பொடித்துத்தூவ ஈரகமும் நீறிடுமய்யா

நாகம் நீற்றுக்குப்பாதி ரசம்விட்டரைத் திடுவாய் அய்யா வாய்
நாவி னமுதம்விட்டு நன்றாயரைத்தேதான் அய்யா
பாகமாய்த் திருசுக்குப் பசி யுலரவைப்பாய் அய்யா அதைப்
பகலவன் முன்வைக்க விரிவு பிறந்துவிட்டால் அய்யா

விரிந்த விடைகளுக்கு மிகுந்த மருந்தைப்பூசி அய்யா நல்ல
விதமாகச் சீலமண் தான் இதமாய்ப் பொதிந்துவிடு அய்யா
தெரிந்துமே பாங்கான சிட்டியை மேல்மூடு அய்யா வாய்
தெரியாமற் சீலைசெய்து அஞ்செரு புடம்போடு அய்யா

சுண்ணந் திருசாலே சூதமும் பற்பமாம் அய்யா—இப்போ
சொன்ன அரிதாரங் கெந்தகம் சுண்ணமாம் அய்யா
தொட்ட சரக்கெல்லாஞ் சுண்ணமதாகுமே அய்யா இந்த
சுண்ணத்தினாலே அநேக வேதையாகும் அய்யா

## விருத்தம் மலவுப்பு வேதை.

மலவுப்பி னாலேயப்பா மதியுள்ள குருத்தான் பாராய்
நிலைதங்குங் குருவுஞ் சீனம் நிகழ்சுண்ணஞ் சரியாய்ச் சேர்த்து
கலையாமல் வகைக்குநாலு களஞ்சிதா னெடுத்துக் கொண்டு
பலிதமா யுப்பிலாத கஞ்சியிற் பொடித்துத் தூவே

தூவியே கிண்டித்தானே சுடரொளி தன்னிலேதான்
ஆவலாய் வைத்திரண்டு நாழிகை யானபின்பு
நாவறுபத்துநாலு சரக்குமே நனைத்து வாட்ட
மேவியே குழைந்துநல்ல மெழுகதாம் வேதையாமே

## கெந்தக மெழுகின் வேதை.

கெந்தக மெழுகின்வேதை சொல்லுறேன்-அய்யா
கெந்தக மெழுகின் வேதை சொல்லுறேன்
கெந்தக மெழுகின் வேதைக் கிட்டித்திருக்கிறதுகாண்
கெம்பீர முடனிந்த அம்புவியோர் களுக்கு (கெ)

விந்தையுடனே யிந்த வேதையைப் பாரு
நந்தனவெள் ளாட்டினிலே அந்தக் கொழுப்பெடுத்து
நெய்யாகவே யுருக்கி நேர்மையிட னெடுத்துப்
பய்யவே கண்டங்கத்திரி பாங்குள சாறுதன்னில் (கெ)

பக்கமே சாய்ந்திடு பாங்குள்ள நெய்யதனைக்
கக்கிஷ மென்றுநீ கலங்காதே மயங்காதே
குட்டித்தக் காளிச்சாற்றில் கூரொரு பங்குதானும்
கெட்டியாய்க கூட்டிவிடு கிலேசமில்லாமலே (கெ)

கணக்காக நெய்யதனிற் கற்றூழும் பாலதனை
இணக்கமா யொன்றாக யிட்டிடில் மெழுகாகும்
வெள்ளிதா னென்பதுக்கு மெழுகு வொன்று சேர்க்க
கள்ளமில்லாத வேதை கைமேலே யாச்சுது (கெ)

## கலித்துறை தருசுச்செம்பு.

தடிகொண்ட பச்சைத்துருசொரு கட்டியைத் தோய்ந்தெடுத்து
முடிகொண்டு நன்றாய் வெண்ணையைக் கொண்டுநல் முக்கியமாய்
முடியப் பொதிந்து குகையில்வைத்தூத முழுதும் பின்பு
படியவெ தாம்பிர மாம்வைத்த செம்பின்பாகமிதே

இதுவென்ன செம்பொன் னுருக்கவொண்ணுநிது வேதையப்பா
மிதுவெட்டு நாகங் களஞ்சிரண் டாமிது சுத்தி செய்து
பதமிட்டுருக்க வயதேழு தாய்சரி பாகமுடன்
மதமான சூதத்தையிட்டே யுருக்கவெட்டாம் வயதே

## தங்கப்பற்பம்.

சென்றிடுந் தக்கத்தைப் பற்பம தாகத்திறந்து சொல்வேன்
மன்றிடு அப்பிரக மாசாதி பத்திரி வண்மையுள்ள
மன்றிடு சித்தாமணக்குநல் முத்து வகைவகையாய்
ஒன்றரைக் களஞ்சி யெடுத்து வொன்ருக உணர்வுசெய்யே

உணர்வென்ன தேன்விட் டரைத்தேமுன் ரேதிய தங்கத்திலே
தணித்தகடாகத் தட்டிக்கொண்டே அந்தத்தகட்டிலுறப்
பணிப்போலப் பூசிப்புடமூன்று போடவே பற்பம் தங்கம்
துணிவான சுண்ணத்தின் வேதைகள் தானிது சொற்படிக்கே

## கோவிலன் பாட்டுச் சந்தம்.

நாக மெடுக்கும் வகைசொல்வேனுன் அய்யா
நாக மெடுக்கும்வகை சொல்யேனுன்
தாகம் வராமலே பாகம தாகவே
ஏகம தாகவி வேகமாய்க் கண்டதோர் (நா)

வெள்ளறுகுவெட்டி வேகவைத்துச் சாம்பல்
உள்ள படியெடுத்து ஓரெட்டுப் படிகொண்டு
தண்ணீரி லேகரைத்துத் தானே தெளிவிருத்து
தண்ணீரை வத்தவைத்து நன்ருக உப்பெடுத்து (நா)

இரும்பி னரபொடியய வீதம்உப் பளவிட்டு
விரும்பிக் கரரங்கூட்டி உருக்கிட யமதாம்
வேசரி நீரிலேதான் குமரியின் சோற்றைப் போட்டு
வாசமுடன் பிழிந்து வகையுடன் சாறெடுத்து (நா)

நல்லதோர் லோகத்தில் நன்ருயிதைக்கொடுக்க
வல்லதோர் லோகமும் மாத்துபத் தாகுமப்பா
கற்ருழை விழுசிம்புங் காரமுமே சேர்த்து
வற்ரு தரபொடியும் வைத்துருக் கிடய்யம் (நா)

ஓடுவடக்கிச் சாற்றில் உற்ற அரபொடியை
வடுவிலா மூன்றுநாள் வகையுட னூறப்போட்டு
அந்த யில்தன்ன அரைத்தர பொடியுடன்
இந்தக் குகையில் வைத்து இருந்தங்கே ஊதிவிட (நா)

வோதிக்குகை பழுக்க உண்மையர பொடியும்
சோதிபெற் றிருந்திடுந் துய்யயிரும் பியமாம்
இந்த நல்லநாக மெடுக்கும்வகை யைச்சொன்னேன்
விந்தை யொருவருக்கும் விள்ளாதே பாகமதை (நா)

விருத்தம்.

அப்பனே நீற்றின்போக்கு அறியதோர் செயநீராலே
செப்பமாய்ச் சூரிய காந்தத் தீவிழச் சுண்ணமாகும்
ஒப்பமா யண்டமப்பா உச்சித மெழுகதாகும்
விப்புடன் கவர்கள்கோடி வேதையுங் கோடியாமே

நாட்டுவளப்பங் கூறல்.

சதுரகிரி மேருகிரி யெங்களது நாடு
சட்டைமுனி தானிருந்த கயிலாசநாடு
மதுவொழுகும் யீஸ்வரனூர் வாழுமெங்கள் நாடு
மலைநாடு களிற்சிறந்த பொன்னம்பல நாடு
பதியுள்ள பரமகிரி யெங்களது நாடு
பதியுள்ளபோகரிஷி வாழுமெங்கள் நாடு
கதிகொடுக்கும் சுருளிமலை யெங்களதுநாடு
காலாங்கி நாதருட பொன்னம்பல நாடே

கட்டளைக் கலிப்பா.

கார சாரந் துருசுடன் சீனமும்
கதித்திடும் அன்னபேதியுங் கூட்டியே
வார மாக வகைக்கோர் களஞ்சியாய்
வண்மையாகவே பீங்கானில் வைத்தேதான்
ஈரமீறிய சாணகந் தன்னிலே
இரும்புக் கிண்ணியை வைத்துப் பதித்துமே
ஆர மூன்றுநாள் தண்ணீருத்தாகவே
ஆதி யாகும்பொன் னம்பல நாடிதே

வெள்ளை நஞ்சுசவ் வீரமுங் காந்தமும்
மீறுஞ் சூடனோடு ரெங்கும் வாங்கியே
வள்ள லேயிந்த அஞ்சு மருந்தையும்
வகைவகை வீதங் களஞ்சாக வாங்கிநீ
அள்ளி யேயிந்த அஞ்சு மருந்திலும்
அஞ்சு மஞ்சாடி தானே யெடுத்ததை
மெள்ள வேசெனீர விட்டே யரைத்துப்பின்
மீறுங் காரங் களஞ்சிக்குப் பூசியே

பூசியே பொரிக் காரத்தையும் நல்ல
புத்தோட்டில் வைத்துச் சித்திய தாகவே
நேசச் சூரிய காந்தக்கண் ணாடியோர்
நெல்லுச் சாத்தா வுக்குமே கம்பினில்
ஊசல் கட்டிடத் திப்பட் டுலர்த்திடும்
ஒரோரு சாமம் மூன்றுநாள் வைத்திட
வீசமாகிலு மேபிசகாதிது
வேகங்கொண்டு கடுங்காரச் சுண்ணமே

இந்தச் சுண்ணமஞ் சாடியெடுத்துநீ
இருந்த அஞ்சுமருந்துஅவ் வீதமும்
முந்தின செய நீரைவிட் டாட்டியே
முழுதும் யீரங் களஞ்சிக்குப் பூசிடு
சொந்த மாய்முன் னிருந்த படியேதான்
சூரிய காந்தத்திப் பட்டிட வேசுண்ணம்
வந்த சவ்வீரச் சுண்ணமஞ் சாடியே
வளரு மெங்கள் பொன்னம் பலநாடிதே

மஞ்சாடி வீதம் அஞ்சு மருந்துமுன்
வைத்த சேனீரால் மாட்டி யரைத்திடு
கஞ்ச மீறிய தாளக்த் திற்குமே
கவச மாகப் பொதிந்துமுன் போலவே
இஞ்சொல் வெய்யலில் மேற்கண்ட வீதமாப்
இருக்கச் சுண்ணம் அரிதாரம் பாரப்பா
துஞ்சுகின்ற துருசுக்குப் பூசவே
சுண்ணமாகும் பொன்னம்பல நாடிதே

தாரச்சுண்ணமுன் னஞ்சு மருந்திற்கும்
சரியாய் யஞ்சுமஞ் சாடியுங் கூட்டியே
சேரப்பா அந்தச் செயநீரை விட்டரை
தீர்க்கப் பச்சைத் துருசுக்குப் பூசிடப்
பாரப் பாருற் றிரவிகண் ணாடித்தீ
பட்டபோதினிற் பச்சைவெளுத்திடும்
ஆரப் பாயிதுக் கீடுள்ள சுண்ணந்தான்
ஆதி யாகும்பொன் னம்பலநாடிதே.

தங்க மூப்பா களஞ்சி யிதற்குமுன்
தானே வாங்கி யுருக்கியே கொண்டுநீ
பங்கமில்லா ரசமோர் களஞ்சிக்குப்
பரிவாம் நல்ல சிறட்டையி லிட்டுமே
தங்கத்தைத் தேய்க்கச் சூதத்தை யுமுண்ணும்
சத்தி ருந்தாற்சூ தம்புறம் பாகவை
அங்கற் பூரச லாசத்து வோர்களஞ்
சாகு மேநற்பொன் னம்பல நாடிதே,

பச்சை மீறுந் துருசு களஞ்சியும்
பண்பதாகப் பொரிகாரமவ்விடை
இச்சை யோடு செயநீரா லாட்டியே
இனிமை யாகிய தங்கத்திற் பூசிட
நிச்செய மாகப் புதுக்கல சத்திலே
நிறைய வேநெல்லை முட்டவே போட்டுப்பின்
வச்சிடு தங்கக் கவசத்தை நீயுமே
வாழ லாம்பொன்னி னம்பல நாடிதே.

கவசம் வைத்த கலசத்தின் வாய்தனைக்
கங்க ணம் போலச் சில்லொன்று போட்டு நீ
திவச மன்றியோர் சீலைமண் ணுஞ்செய்து
திறமாகப் பூமியிற் சென்று புதைத்திடு
அவசம் வாராமற் காத்தே யிருந்துபின்
ஞகத் துவாதசம் நாளது சென்றிடத்
துவசமாக யெடுத்துநீ பார்த்திடு
சொல்லு மம்பல நாடெங்கள் நாடிதே

கலசந்தன்னி லிருக்கின்ற தங்கத்தைக்
கவசந்தன்னை யெடுத்துநீ பார்த்திடு
விலையிடுந் தங்கம் மேற்பூச்சுத் தீராது
மீண்டிருந்திடுஞ் சூதத்தையே யுண்ண
மலியு முண்ணுப்பைத் தான்கொண்டு வந்துநீ
மாட்டிடத் துருசது வெள்ளையாக்கிடும்
அலைய வேண்டாமிதுசெய்து பார்த்திடு
ஆடு மம்பல நாடெங்கள் நாடிதே

துருசுச் சுண்ணமு மஞ்சாடி யெடுத்துநீ
தொந்த மான மருந்தஞ்சும் வாங்கியே
வரிசையா யஞ்சு மஞ்சாடி கூட்டிநீ
வலம தாபநவச் செயனீர்விட் டாட்டியே
கரிச லகன்றிடுந் தங்க மதுக்கப்பா
சுவச மாகப் பொதிந்திடு சொல்லினேன்
இரவி காணவே மூன்றுநாள் வைத்திடு
எங்கள் நாடுபொன் னம்பல நாடிதே.

இரவி காண்பது சூரிய காந்தத்தீ
இன்ப மாய்முன் னிருந்த படியேவை
தாமுள்ள தங்கஞ் சுண்ணம தாகுமித்
தங்கச் சுண்ணமும் முன்நாலு சுண்ணமும்
குருவ தாய்க்களஞ்சி வீத மெடுத்துமே
கொள்ளுங் காண்பொடி செய்து குழரயினில்
அருமை யான குருவிது கண்டறி
ஆதி யாகும்பொன் னம்பல நாடிதே.

குருவிலோர்மஞ் சாடி யெடுத்துமே
குழையுங் காணு மமுதத்தை விட்டுநீ
அருவ தாகும் சிறுகல சத்தினில்
அருமை யாகவோ ரண்டத்தை வைத்துநீ
குருவ தாகக் குழைந்த மருந்தையும்
கூர்மை யாய்மேலுங் கீழும தாகவே
ஒருகா சகலத்துள் ளேதான் போட்டிட
உண்டிடு மெங்கள் பொன்னம்பல நாடிதே

போட்டிட்டு வெயில் வைத்திடத் தானும்பின்
புதிய வெள்ளைக்கரு தானும் வந்துமே
வட்டி லினிது வழிந்தே யுறைந்திடும்
வடியும் மஞ்சட்கரு மெழுகாகிடும்
வெட்டி நீர்துள்ள வெள்ளைக் கருவுதான்
மீறு மெந்தச் சரக்கையுங் கட்டிடும்
அட்ட லோகமு மஞ்சள் மெழுகினில்
ஆகிடு மெங்கள் பொன்னம்பல நாடிதே.

மெழுகு தானுங் களஞ்சொன் றெடுத்துமே
வீரனுக்குக் கவசம் பொதிந்துதான்
தழலில் வாட்டச்சவ் வீர மெழுகதாம்
சவ்வீர மெழுகு களஞ்சி யெடுத்துநீ
மெழுகு நீரதைவிட்டு அரைத்துமே
வெடியுப்புக் களஞ்சிக்கு மேலே பொதிந்திடு
விளக்கினில் வாட்ட மெழுகாகு மேபின்பு
வேதைபா ரம்பல நாடெங்கள் நாடிதே

வெடியுப்பு மெழு கோர் களஞ்சி யெடு
மீரிய காரீய மைம்பது தன்னிலே
கடவித் தால்மாத்து வொன்ப தரைகாணும்
காசினி தன்னிலே கண்கண்டவேதையாம்
திடமப்பா குரு சென்றிடவேதைதான்
சீருடன் குரு வானசுண்ணம்பினில்
மடிவா ரேசரக் கெல்லாம் சுண்ணமாம்
வளரும் நாடு பொன் னம்பல நாடி தே.

விருத்தம்

மலைநாடு யெங்கள் நாடு வகுத்திடு மருந்துக் கெல்லாம்
தலைதூரம் போகமாட்டோம் சுத்தியே குகையோரத்தில்
இலைகளு மரங்க ளெல்லாம் யெதிராக வளர்த்து வைப்போம்
புலையர்க்குத் தோன்று மோ பொன் னம்பலநாட்டின் போக்கே

பொன்னம் பலத்தினூடே புகழ்பெறப் பாடிப் பின்னும்
இன்னமோர் செயநீ ருக்கும் இசைந்திடுஞ் சுண்ணத்திற்கும்
பொன்னஃதோர் மெழுகுக்குந்தான் புகழுறுங் கட்டுக் கெல்லாம்
மின்னலங் கருக்க ளெல்லாம் விட்டுநான் சொல்லிட்டேனே

சொல்லினே னங்கங் கேதான் துணிந்துநீ சூதாய்ப் பாரு
வெல்லலாம் பின்புவேதை மென்மேலுந் தப்பாதுண்மை
நல்லதோர் விடையின் தண்ணீர் நலமிடக் கமுதமப்பா
மெல்லிய வெள்ளையாகும் வேதையாஞ் சோதி யாமே

சோதனை பார்த்தேனப்பா சுகமுடன் நீயும்பாரு
ஆதியாங் குருவுக்கப்பா அழகுள்ள மரகதந்தான்
நீதியின் நீரேகூட்டு நிலைகெட்டுச் செயநீராகும்
வாதிகாள் சீன நீறுவளர்கின்ற மெழுகுக் கெல்லாம்

ஆமப்பா சிப்பிநீறு அருஞ்சுண்ணந் தெளியவைப்பாய்
ஓமப்பா கட்டுஞ் சேனீர் உத்திரம் நீரதாகும்
சாமப்பா செந்தூரங்கள் சவ்வீரச் சுண்ண மாகும்
வேமப்பா வேதையாகும் வியன் பச்சைத் துருசைக்கேளே

## ஆனந்தக் களிப்பு - துருசுக்குரு

தருசில்லாக் குதிரைதனை நீயும் — வெகு
அடுக்காய்ச் சவுக்குக்கொண் டடித்தாலும் போயோ
பருசகெட்ட வாதியா னவனை — இந்தப்
பாரி லொருசத்தி பண்பாய் வளர்வான்
வைரக்கும் காடெக்குக் கூடி — ஒரு
உப்பனை விடெக்கு முறைய வுலாவும்
அருக்கு மில்லாத வண்ணம் — சற்று
மாக அருந்தாது சோதனை யப்பா

வஸ்துவு மானகுரு வப்பா — இந்த
மாகுரு விட்டவர் மதிகெட்ட வாதி
உத்தமோர் பூரணமப்பா — எவர்க்கு
முகுருவி யதுதாலும் பூமியில் வீழும்
சற்குரு விக்கத்தன் னிர்தான் — இது
சகலத்துக்கு முறை தப்பாமற் சொன்னேன்
கற்டனை மாகவெ தானும் — எந்தச்சரக்
காறுதும் கன்றாகக் கட்டியே கொள்வாய்

திரிகோணத் தயிலத்துடனே — நயம்
சேர்த்தரை காலுக்கு ஒன்றாக வேதான்
அரிதிடம் பூரம்சவ் வீரம் — முதலா
மருவத்தா லுபதிகோ ரசனை புனுகு
அப்பா வுரைத்திடுசெந் தூரம் — வேதைக்
காதிகுரு வென்றுமுன் னோமும் சொன்னோம்
செப்பமாய்க் கண்டறி யப்பா — பார்த்தால்
சிரஞ்சீவி யாகவெப் போதுமீ வாழ்வாய்

தெரிவுடன் பார்த்தறி யப்பா — இதைச்
சென்றுபார்ப் பவனே பெரியவ னப்பா
அறிவுடன் ஒருநூறு வயது — சென்றும்
அவனே பதினாறு வயதா யிருப்பான்

வாதுகொண்ட இளமைவல் லோர்கள் இந்த
மாய மூன்றுவகை நாலுங்கற்றோர்கள்
சாதுயிள மையாளு லென்ன பெரியோன்
தனக்கீடு சொல்லிய தான்பெரி யோர்கள்

மாட்டுக் கோம்பு வேதை.

வறுமை தவிர்த்த ரிஷி யோர்கள் தவிர
மானிலத்தி லுள்ள புருடருமில்லை
எருமைக் கடாக்கொம்பு நன்று யது
இணையாய் வளைந்து யிருப்ப தெடுத்து
உரிய வெடியுப்பு நாலு கூறில்
ஒருகூறு தனிலொன் பதுசிப்பி வைத்து
அரியரெண் டாங்கூறு தன்னில் மிக
அன்பாக வேபத்துச் சிப்பியும் வைத்து

பட்டைய தாய் மூன்றுங் கூறில் அந்தப்
பத்துச்சிப்பி பின்பு சீலைமண் செய்து
நட்டக் குழியது வெட்டி அதில்
நாட்டியே ரெண்டு முழப்புட மிட்டு
எரிந்தது ஆறியே பின்பு இதை
யெடுக்க வுருக்கியே யியமா யிருக்கும்
அரிந்து துத்தக்கட்டி தனிலே களஞ்சியதை
யாகவும் வீரமதி லிக்காரச் சுடரை

கால்களஞ்சி புழுகிடைக் கொன்று சேர்த்துக்
கண்டு அமுத மதனாலே யாட்டி
நால்மேற் கவசமுஞ் செய்து பின்பு
நற்சிர வோட்டிற் புடமிட வியம்
தாளகஞ் சவளை யிறக்கக் கேளு
சற்குரு மாகுரு விரண்டையுங் கூட்டி
பாழித் தகட்டிற்குப் பூசி அது
பதமாகக் கரியினி லுருக்கிட வியம்

காந்தஞ் சவளை யிறக்கி யிது
களஞ்சிமூன் றுக்குக் காரங் களஞ்சிய தொன்று
சாந்த குன்றியிலைச் சாற்றில் அதைத்
தான்மாட்டி யரைத்துப் புதுச்சட்டி தன்னில்

ஆமப்பா சிப்பிநீறு அருஞ்சுண்ணந் தெளியவைப்பாய்
ஓமப்பா கட்டுஞ் சேனீர் உத்திரம் நீரதாகும்
சாமப்பா செந்தூரங்கள் சவ்வீரச் சுண்ண மாகும்
வேமப்பா வேதையாகும் வியன் பச்சைத் துருசைக்கேளே

ஆனந்தக் களிப்பு - துருசுக்குரு

துருசில்லாக் குதிரைதனை நீயும் — வெகு
துடுக்காய்ச் சவுக்குக்கொண் டடித்தாலும் போமோ
பருசுகெட்ட வாதியா னவனை — இந்தப்
பாரி லொருசத்தி பண்பாய் வளர்வாள்
ஊரெங்கும் நாடெங்குங் கூடி — ஒரு
உற்பன வீடெங்கு முறைய வுலாவும்
ஆருக்கு மில்லாத வண்ணம் — சற்று
மாக அருந்தாது சோதனை யப்பா

வஸ்தது வு மானகுரு வப்பா — இந்த
மாகுரு விட்டவர் மதிகெட்ட வாதி
உத்ததோர் பூரணமப்பா — எவர்க்கு
மூடுருவி யதுதானும் பூமியில் வீழும்
சற்குரு விந்தத்தண் ணீர்தான் — இது
சகலத்துக்கு முறை தப்பாமற் சொன்னேன்
கற்பனை யாகவே தானும் — எந்தச்சரக்
காணுலும் நன்றாகக் கட்டியே கொள்வாய்

திரிகோணத் தயிலத்துடனே — நயம்
சேர்த்தரை நாலுக்கு ஒன்றாக வேதான்
அரிவிடும் பூரம்சவ் வீரம் — முதலா
யறுவர்தா ஞபதிகோ ரசனை புனுகு
அப்பா வுரைத்திடுசெந் தூரம் — வேதைக்
காதிகுரு வென்றுமுன் னேநாமும் சொன்னோம்
செப்பமாய்க் கண்டறி யப்பா — பார்த்தால்
சிரஞ்சீவி யாகவெப் போதும்நீ வாழ்வாய்

தெரிவுடன் பார்த்தறி யப்பா — இதைச்
சென்றுபார்ப் பவனே பெரியவ னப்பா
அறிவுடன் ஒருநூறு வயது — சென்றும்
அவனே பதினாறு வயதா யிருப்பான்

வாதுகொண்ட இளமைவல் லோர்கள் இந்த
மாய மூன் றுவகை நூலுங்கற்றோர்கள்
சாதுயிள மையாறு லென்ன பெரியோன்
தனக்கிடு சொல்லிய தான்பெரி யோர்கள்

மாட்டுக் கோம்பு வேதை.

வறுமை தவிர்த்த ரிஷியோர்கள் தவிர
மானிலத்தி லுள்ள புருடருமில்லை
எருமைக் கடாக்கொம்பு நன்று யது
இணையாய் வளர்ந்து யிருப்ப தெடுத்து
உரிய வெடியுப்பு நாலு கூறில்
ஒருகூறு தனிலொன் பதுசிப்பி வைத்து
அரியரெண் டாங்கூறு தன்னில் மிக
அன்பாக வேபத்துச் சிப்பியும் வைத்து

பட்டைய தாய் மூன்றுங் கூறில் அத்தப்
பத்துச்சிப்பி பின்பு சீலைமண் செய்து
நட்டக் குழியது வெட்டி அதில்
நாட்டியே ரெண்டு முழப்புட மிட்டு
எரிந்தது ஆறியே பின்பு இதை
யெடுக்க வுருக்கியே யீயமா யிருக்கும்
அரிந்து துத்தக்கட்டி தனிலே களஞ்சியரை
யாகவும் வீரமதி விக்காரச் சுடரை

கால்களஞ்சி புழுகிடைக் கொன்று சேர்த்துக்
கண்டு அமுத மதனாலே யாட்டி
நால்மேற் கவசமுஞ் செய்து யின்பு
நற்சிர வோட்டிற் புடமிட யீயம்
தாளகஞ் சவளை யிறக்கக் கேளு
சற்குரு மாகுரு விரண்டையுங் கூட்டி
பாழித் தகட்டிற்குப் பூசி அது
பதமாகக் கரியினி லுருக்கிட யீயம்

காந்தஞ் சவளை யிறக்கி யீது
களஞ்சிமூன் றுக்குக் காரங் களஞ்சிய தொன்று
சாந்த குன்றியிலைச் சாற்றில் அதைத்
தான்மாட்டி யரைத்துப் புதுச்சட்டி தன்னில்

வில்லையை உள்ளே தான்வைத்து
மேற்சட்டி மூடியோர் சீலைமண் செய்து
வல்லமை ரெண்டு முழந்தான்
வாட்டப் புடமிட்டு மறுநா ளெடுத்து

எடுத்துமே பார்க்கநல் லீயம்
லேற்றபஞ்ச லீயமுங் கெந்தியின் செம்பும்
மடுத்ததங் கஞ்சரிய தாக்கிக்
மாக்கியே சரக்கிடச் சரக்கெல்லாங் கட்டும்
செந்தூர பற்பமிதிலே
சேர்மானஞ் சேர்த்துவிட் டாலெதுங் கட்டும்
வந்திடுஞ் சூதமுங்கட்டும்
வைத்திடச் சூதமும் நீறியே போகும்

செந்தூர மிதுதானே யப்பா
செயநீரென் றபோக்குத் தானிதி லுண்டாம்
வந்ததோர் சரக்குகளுக் கெல்லாம்
மாட்டிவிக் கச்செய்யும் வேதையு மாமே

விருத்தம்—சரக்குகள் கட்ட.

ஆமப்பா பாகற்காயி லானதோர் விரைய ரைக்க
ஆமப்பா தண்ணீ ரல்லால் வேறொன்று மாகாதப்பா
போமப்பா முன்பு சொன்ன புகழுட காரங் கொண்டு
ஆமப்பா சரக்கை யெல்லாம் அரைபதினொன் றுங் கூட்டே.

கூட்டிடு ஆட்டி வில்லை கொண்டிடு பரங்கிக் காய்தான்
நாட்டிடு சீலை மண்தான் நயமுடன் செய்த பின்பு
ஓட்டினில் வைத்து மூடி ஒருசீலை மண்ணுஞ் செய்து
கூட்டியே குக்கு டந்தான் புடமிடக் குருவா னரே.

குருவான நாய்ப்பா கல்தான் குறிப்புட னொருமாக் கூட்டி
திருசுக்குப் பூசி வெய்யில் தோன்றிடச் சுண்ண மாகும்
குருவதைக் கூட்டா னகிற் குறிப்புள்ள வேதை காணுன்
மருவிடும் பெண்ணாள் வாலை வயதுட னிருப்பா ராமே.

வாறுகேள் திருசே ராஜன் வாதத்துக் கெல்லாஞ் சூதம்
மீறிய வால ராஜன் வீரனுந் தளவாய் லிங்கம்
கூறிய வேதைக் கெல்லாம் கோசமும் பீச மூந்தான்
மாறிலா வண்ணங் கோரோ சனையொடு மறக்க லாகா.

ழுறக்கவொண் ணாது வாதம் வருந்தினால் வாதங் கிட்டும்
உறக்கங்க ளாகா தப்பா உத்தமர்க் காகச் சொன்னேன்
பிறக்கவே அரிது கண்டாய் பிறந்திடிற் கற்பங் கொள்வாய்
இறக்கவு மாகாதப்பா இருந்திடு யில்லத் தோடே

இல்லமே குணமாஞ் சொன்னே னில்லவ ளிணக்கமானால்
அல்லது யில்லா விட்டால் அடவுட னில்லம் வேண்டாம்
வல்லவர் கற்பங் கொண்டு மலையேறிப் போனார் பின்பு
கொல்வதார் வெல்வ தார்காண் குன்றுரு மசகமாமே

குன்றுதா னிவனுக் கீடோ கூத்துவ னிவனுக் கீடோ
நன்றுகொள் தேவ ரீடோ நாட்டினில் மனித ரீடோ
மன்றினி லாடு மீசன் வாதாடும் பார்வ திப்பெண்
என்றவ ரிரண்டு பேரும் யீடல்லால் வேறு முண்டோ

உண்டென வாத வித்தை உசிதமாய்ப் பார்ப்ப தென்ன
விண்டுபோ விருக்க லாகும் மேனியும் வச்சிர காயம்
கொண்டிட்டேன் கற்ப மப்பா கூசாம லமுரி யாலே
பண்டுள்ள அட்ட லோகம் பழுக்குங்காண் கற்பங் கொள்ளே

சிப்பிச் செயநீர்.

கற்பமாஞ் செயநீர் தன்னை கட்டுட னுரைப்பேன் கேளு
சிற்பம தான செய்தி செப்புவேன் சிப்பி நீறு
உற்பணம் பூரணத்தி லொருபடி வாங்கிக் கொண்டு
நற்பத சத்தியப்பா நிலவுப்பு நாலுக் கொன்றே

ஒன்றிட்டுக் கரைத்து நீரை யொருசட்டி தனிலே வாங்கித்
துன்றிடுஞ் சிப்பி பத்து தோன்றிடப் போட்டு மேலே
கன்றிடுங் குறுங்க ளஞ்சி கட்டுடன் போட்டோர் சட்டி
பொன்றிட மேலே மூடிச் சீலமண் செய்து போடே

போட்டிட்டுப் புடத்தி லப்பா பொடியாகுஞ் சிப்பி நீறு
காட்டெருப் பொருக்கி வைத்துக் கசபுட மாகப் போட்டு
மாட்டியே மறுநாள் பார்க்க மயங்காமற் சிப்பி நீறும்
ஆட்டங்கள் போக்குப் பார்த்துஅறிவுடன்தொழிற் செய்வாயே

அண்டச் சுண்ணம்.

செய்யப்பா அண்டத் தோடுஞ் சீனமுஞ் சரியாய்க் கூட்டி
மெய்யப்பா முன்னே சொன்ன சரக்குங்கால் வீதஞ் சேர்த்துப்
பய்யவே அறிந்து பார்த்துப் பண்புட னூட்டித் தேனில்
பொய்யல்ல புத்தோட்டில்தான் புடங்கோழிப்புடமாய்போடே

புடம் போட்டு நீரை வாங்கிப் புகழுப்புச் சுண்ணத் துக்குத்
திடமுடன் களஞ்சி கூட்டித் திறங்கோழிப் புடமே போட்டு
எடுநல்ல கார மேறி யிருக்குமே குருவாஞ் சுண்ணம்
வடிவுள்ள மானி டர்கள் மகிழுவார் குருவைக் கண்டே.

கண்டிடு மிந்தக் காரங் கடுங்கார மேரு வப்பா
அண்டத்தின் சுண்ணந் தன்னை அழகுள்ள துருசுக் கெல்லாம்
கொண்டிடும் ஒருமாக் கூட்டு கூருள்ள காரமேறும்
விண்டிட்டேன் கருக்களெல்லாம் விதமண்ட நீறே வேதை

வேதையா மிந்த நீறை விட்டிடில் வேதை யில்லை
வாதத்தின் கருவை யெல்லாம் மனதினி லொளிக்க வில்லை
நீதியாம் நினைவாய்ப் பாரு நெறியுடன் நாதர்க் கெல்லாம்
வேதை தான் கண்டபின்பு மிகத்தர்மங் கொடுத்தீய் வாயே

ஈயப்பா சாது கட்கும் இயல்பர தேசி கட்கும்
காயத்தோர் தங்க ளுக்கும் கடும்பசி தீர்ப்பா யப்பா
நீயப்பா வேதை கண்டால் நீமகிழ்ந் துண்ண வேண்டாம்
தாயப்பா கர்வங் கொண்டால் தமனியம் பொய்யாய்ப் போமே

பொய்யல்ல மெய்யாய்வாழப் புகலுவே னின்னங் கேளு
தையலா ருறவு தள்ளு தாய்தந்தை யுறவுதள்ளு
மையிடுங் கண்ணு ளாசை வலையினி லகப்ப டாமல்
மெய்யுடன் மலையே றிப்போய் வேதைபார் வேதைகாணும்

வேதைகள் பொய்யா தப்பா விலையிட்ட யில்லத்தாலும்
பாதமே பணிந்து சொன்ன பணிவிடை செய்து கொண்டு
நீதியாய்ப் பாதபூஜை நித்தமுஞ் செய்வா ளாகில்
வாதியா யிருக்க லாகும் மானிலந் தன்னி லன்றே

மானில மங்கை யாசை வைத்திடில் மலையி லென்ன
வானில மில்லத் தானே மருவினு லங்கென்னுகும்
தானதர் மங்கள் செய்து சம்புசிற் பரையை நன்றுய்
ஏனமாய்த் தியானஞ் செய்தா விருக்கலா மெச்குந் தானே

எங்குமே யிருக்க லாங்காண் யில்லத்தின் வாழ்க்கை யாகச்
சங்கையாய்ப் பத்தி முத்தி வயிராக்கியந் தப்பா னுகில்
கொங்கணர் போக நாதர் போலவே கூடி வாழ்ந்து
மங்கைய ரோடுமேரு வரையினிற் செல்ல லாமே

## கோரக்கர் கூடுவிட்டுக் கூடு பாய்ந்தது.

### சித்தர்கள் ஜாதி விபரம்.

ஆமப்பா சித்தர் ஜாதி யரைந்தன ரகஸ்தி யர்தான்
ஓமப்பா முற்பிறப்பை ஒன்றுஞ் சொல்லாது விட்டார்
வாமப்பா அவர்தம்சாதி வளமையைத்தானே சொன்னர்
நாமப்பா ஆதிதொட்டு நலமுடன் சொல்வே னப்பா

அப்படியான சித்த ரன்புட னிந்திர ஜாலம்
செப்படி மயேந்திர ஜாலம் திருவொடு கெவுனம் பாய்தல்
தப்பித மில்லாமற் றுன் தன்கூடு விட்டுப் பாய்ந்து
இப்படி மறுகூ டேகி யிருந்துமே வாசஞ் செய்தார்

செய்குவ ரகஸ்தியர்தான் சிறந்தவிப் பிரரேயாகும்
வெய்தல்வால் மீகர் தானும் வேடுவ ஜாதி காணும்
மெய்ராம தேவ ராதிவேதப்பிரா மணராம் பின்பு
உய்யவே மறவர் தேவர் உயர்குலச் சாதியப்பா

சாதிதான் சொல்லு கின்றேன் தக்கதோர் சித்தர்தாமும்
நீதியாய்க் கூடுவிட்டு நிகல்கூட்டில் போய்நுலைந்தால்
மேதினி தனிலே யானும் வியன் சாதி சொல்லப் போமே
கோதில்லாக் கூடுவிட்டுக் கூடுதான் பாய்ந்ததைக் கேள்

அப்பனே கோரக் கர்தான் ஆதிவிப் பிராய்ப்பின்பு
ஒப்பவே சேனிய னுகிஉயர்குகை தனிலிருந்து
எப்பவு மழியாத் தேகத்தியல்புடன் வாழுநாளில்
செப்பமா யிடையன் மாடுதிறளாக மேய்க்கக் கண்டார்

கண்டதோ ரிடையன் றன்னைக் கதித்ததோர் நாகந் தீண்டிக்
கொண்டதோ ரிடையன் சாகக் குறித்திடுந் தோழர் கண்டு
விண்டவன் மனையாளுக்கு வேகமாய்ச் சென்று சொல்லப்
பண்டுள்ள விதியோ நான்தான் பாவியோ யென்று வந்தாள்

வந்தவள் தன்னைக்கண்டு மறுகூடு பாய் வதற்கு
அந்தமா கிரிக்குச் சென்று ஆக்கையைப் பதனஞ் செய்து
நந்தனு மிடையன் கூட்டில் நயமுடன் பாய்ந்து பின்பு
முந்தியுள் ளிடையன் போல மோகமங்கையர்முன் வந்தார்

மங்கையர் முன்பு கோனும் வந்திட மனையா ளுந்தான்
செங்கையாற் றழுவியென்ன செய்கைகள் நடந்ததென்று
அங்கவள் கேட்க விந்த ஆனதோர் காட்ட கத்தில்
இங்கணம் நாகந் தீண்டி யியல்புடன் போன பின்பே

போனபின் மயக்க மாகிப் புலனது மயங்கி வீழ்ந்து
கோனவ னருளாளிப்போ கொடுமயக் கங்கள் தீர்ந்து
தானவ னாக நானுந் தனியதா யெழுந்திருந்து
தோணவே யுன் முன்னாகத் துணிவுடன் வந்தே னென்றார்

மயக்கத்தைத் தீர்க்க வென்று மந்திர வாதி தன்னை
நயமுடன் கூட்டி வந்து நலமதாய்ப் பார்க்கச் சொல்லச்
செயமுள்ள மந்திர வாதி தீர்க்கமாய்க் கிட்டப் போகப்
பயமிலா தவனைக் கண்டே பண்புடன் விடம்போச் சென்றார்.

போச்சென்று சொன்ன பின்பு பொழுதுமே விடிந்து தப்பா
ஏச்சது வாரா மற்று னிடையனு மெழுந்தி ருந்து
வாச்சது இதுதா னென்று மனைவியின் பக்கம் வந்து
மேச்சமாட் டின்பின் னேகி மேய்ப்பது மில்லை யென்றே.

மேயாம லிருந்தன்னாளில் மெய்ப்புட னமுதம் வாங்கி
ஓயாமல் வேதை செய்வார் உசிதமா யாயர் மாதைத்
தோயவே செல்வார் பின்பு தொடருவார் மாதி டத்தில்
நேயமாய் நல்ல மாதை நெறியுடன் மணங்கள் செய்வார்.

மணத்துட னிருந்தார் நூறு வயதுமட் டும்பெண் ணோடு
இணக்கமா யிருந்து வாழ்ந்தே இனிமையா யிருக்கும் போது
மணத்துடன் வேட்டை யாட வனத்தினி லரசன் வந்தான்
கணத்தினில் வேட்டை யாடிவருகையில்சடத்தைக் கண்டான்

அரசனுஞ் சடத்தைக் கண்டு யாரிதோ வென்றுசொல்லி
பெரியதோர் விரக டுக்கிப் பிணமென்று சுட்டுப் போட்டு
உரியதோர் சேனை யோடு ஊர்தனில் வந்த பின்பு
பிரியமா யிடைய னுந்தான் கிரிதனி லேறி வந்தே.

வந்திடுங் கிரியி னுள்ளே மகிழ்வதாய் முன்பு வைத்த
அந்தநற் சடலந் தன்னை அன்புடன் பார்க்கக் காணார்
இந்தநற் சடலந் தானும் எங்கையோ காணோ மென்று
விந்தையீ தென்று பார்த்து வெந்தது சடல மென்றே.

என்றுகோ ரக்கர்சிட னியல்நா கார்ச் சுனர்தன் னோடு
அன்றுசா ணுங்கி யாரும் அன்புடன் மூன்று பேரும்
சென்றுமே வனங்கள் தோறும் சித்தர்க ளிடத்தி லேகி
அன்றுரெவ்வோர் வருட மாக அருமையா யிருந்து வந்தார்.

அருமையாய் வனங்கள் தன்னி லடவுட னிருந்து கொண்டு
பெருமையாய் வனசஞ் சாரம் பேணியே செய்தா ரப்பா
உருமையாய் முனிவ ரோடு ஒவ்வொரு வருடந் தங்கிச்
சிறுமையில் லாதுகற்பம் செய்துமே கொண்டார் பாரே.

கொண்டபின் னுற்றி ரோரம்குகையதுசெய்து பின்னும்
அண்டரும் மயங்க வேதை யனேகமாய் முடித்து வைத்துச்
சண்டனும் வாரா மற்றுன் சதுரமா கிரியி ருந்து
தொண்டர்க ளோடு வேதை சுகமதாய்க் குளிகை தீர்த்தார்.

தீர்த்திடுங் குளிகை செய்து இடைத்திரு மேனி தன்னை
ஆர்த்திடச் சித்தி செய்து அழியாத சடல மாக்கிப்
பார்த்தபின் மூவ ருந்தான் பகாசது ராச லத்தில்
மூர்த்தியாய் மத்தி தன்னில் முயன்றனர் குகையி னுள்ளே.

### கொங்கணர் கூடுவிட்டுக் கூடுபோய்ந்தது.

உள்ள கொங் கணரு மாதி யிடையனா யுலகந் தன்னில்
மெள்ளவே கற்ப முண்டு வியப்பதாய் மலையில் வந்து
வள்ளலா யிருந்து பேரை வாங்கியே பளிங்க ரோடு
கள்ளமில் லாமல் வாழ்ந்து காட்டினி லிருந்து வந்தார்.

வந்திடும் போதங் கேதான் மலைப்பளிங் கனுமே செத்து
விந்தையாய் போகப் பார்த்து மிகவேதா னிரக்கங் கொண்டு
சந்தோஷ மாகத் தம்தன் சரீரத்தை வைத்து விட்டு
இந்தநற் சரீரந் தன்னி லியல்புடன் பாய்ந்து விட்டார்-

விட்டதைப் பளிங்கர் கண்டு மிகவேகொங் கணர்தே கத்தைக்
கட்டையில் வேகவைத்துக் களிப்புட னிருந்து விட்டார்
திட்டமாய்ப் பளிங்கரோடு சேர்ந்திலை செடிகள் கண்டு
சட்டமாய்த் தெரிந்து கற்பந் தானுண்டு மலையில் வாழ்ந்தார்

மலையிலே வாசஞ்செய்து வந்தன ரங்கங்கே கேதான்
தொலைதனி லிருக்கும்பூடு துறவுடன் தெரிந்து கொண்டு
வலையினி லகப்படாமல் மலையெலாஞ் சுத்திச் சுத்தி
இலைசெடி மரங்கள் தானும் இயல்புட னறிந்திருந்தார்

சுந்தரானந்தர்.

இருந்தவர் பேரும் பெற்று இயல்புடன் குகையில் வாழ்ந்தார்
அருந்தவஞ் செய்யுஞ் சுந்த ரானந்தர் ரெட்டிச் சாதி
பெருந்தவஞ் செய்து கற்பம் பிரபல மாகக்கொண்டு
திருந்தவே சித்தனாகிச் சிறப்புடன் பேர்பெற் றாரே

மச்ச முனிவர்.

பெற்றுடன் வாழ்ந்தா ரிந்தப் பேர்பெரும் மச்சர் தாமும்
உற்றசெம் படவர் ஜாதி உலகத்தில் நல்ல சித்தர்
கொற்றவ னருளா லந்தக் குலம்விட்டு மவருமேகி
மற்றநற் கலைகள் கற்று வகாரத்திற் றிரமானாரே

கமலமா முனிவர்

திரமதா யிருந்து வாழ்ந்து செடமது பெலக்கச் செய்தார்
வரமதா யுறுங்கமல மாமுனி கண்ணர் சாதி
பரமதா யிருந்து யிந்தப் பாரினில் வேதை செய்து
தரமதாய்க் கற்பங் கொண்டு சடமதை வலுக்கச் செய்தார்

நந்தீசர்.

செய்தன ரவரும் நல்ல திருநந்தி யீசர்தாமும்
வையக மெய்க்க வேத மறையவர்குலத் துதித்தோர்
மெய்யுட னீசன் பக்கம் மேவியே கற்பங்கொண்டு
பையவே கிரியிற் சென்று பரனிடம் வரம்பெற் றாரே.

சட்டை நாதர் கூடுவிட்டுக் கூடு பாய்ந்தது.

பெற்றுடன் வாழ்ந்தா ரந்த பேர்பெற்ற சட்டைநாதர்
உற்றசே ணியற்குலத்தி லுதித்துநெய் தொழிற்ப டித்து
நற்றமிழ் தேர்ந்து இந்த நானில மெய்க்க ஞானங்
கற்றுமே கற்பங் கொண்டு காசினி தனைவிட் டேகி.

விட்டுடன் மலையி லேறி வேதைக ளநேகஞ் செய்து
சட்டம தாக வேதான் சதுரமா கிரியில் வந்து
மட்டுடன் பிராமண தேக மதனிலே நுழைந் தகந்து
திட்டமாய்க் கற்பங் கொண்டு சிறப்புட னிருந்தார் பாரே.

போகர்.

பாரப்பா போக நாதர் பண்புள மட்குலர்ளர்
நேரப்பா செனித்து யிந்த நீணில மதனி லேதான்
காரப்பா கற்பங் கொண்டு காசினி தனையும் விட்டுச்
சீரப்பா சீனந் தன்னிற் செகமெய்க்கச் செய்தா ரன்றே.

ரோமரிஷி கூடுவிட்டுக் கூடுபோய்தது.

அன்றுமே ரோம ராதி க்ஷத்ரிய ராயு தித்து
நன்றுள சேடன் கூட்டில் நலமுடன் பாய்ந்து வேதை
சென்றுமே கண்டு நூல்கள் சிறப்பதாய் முடித்துக் கொண்டு
என்றுமே அழியாத் தேக மெடுத்துமே குகையில் வாழ்ந்தார்.

பிண்ணாக்கீசர்.

குகையிலே வாழ்ந்தார் பிண்ணாக் கீசரும் பிராமணன்றன்
திகையிலே வேத நூல்கள் தீர்க்கமாய்ச் செய்து வைத்து
நகையிலாக் கிரந்த சாஸ்திரம் நாடெங்குந் தெரியச் செய்து
வகையொடு கற்பங்கொண்டு வாழ்ந்தனர் கிரியிலேதான்

பிர்ம முனிவர்

கிரியிலே யிருந்தார்பிர்ம முனிவருங் கிருபை யோடு
தெரியவே கார்க்காட்டாரின் சாதியிற் பிறந்தே அங்கு
அருளுட னிருந்து பின்பு அறுவாத சித்தி செய்து
பொறுமையாய்க் கற்பங் கொண்டு புகுந்தனர் வெளியிலேதான்

அழுகண்ணிச் சித்தர்.

வெளியினி லொளியாய் வந்த மிக்கதோ ரழுகண் ணர்தான்
அழுதபா வனையி னோடு கண்ணில்நீ ராருய்த் தோன்றப்
பழுதிலாக் கார்க்காட் டான்றன் பாலனாய்ப் பிறந்து வந்து
அழுகண்ணிச் சித்த ரென்று அருளுடன் பேரிட் டாரே

சங்கமுனிவர்.

பேரிட்டு வந்த சங்க முனிவருஞ் சேட னாகும்
நீரிட்டு யோக முற்று நிஷ்கள மாயிருந்து
ஆரிட்ட வேதை செய்து அடங்காத கற்பமுண்டு
தாரிட்ட சித்த ரோடு தான்கலந் திருந்தா ரன்றே

இடைக்காட்டுச் சித்தர்.

அன்றுதான் சடல சித்தி யாக்கியே யிருந்தா ரப்பா
நன்றுட னிடைக்கா டன்றான நலமுட னிடைய னாகும்
குன்றாத அருளைப்பெற்றுக் கோகுலம் விட்டுப் பின்பு
சென்றேதான் கற்பத்தாலே சித்தரா யிருந்தார் பாரே

திருவள்ளுவர்.

பாரப்பா வள்ளு வர்தான் பண்புள்ள சூத்திர ஜாதி
நேரப்பா நெசவு செய்து இல்லத்தி லிருந்து கொண்டு
சீரப்பா கற்பங் கொண்டு சடமது வலுக்கச் செய்து
நேரப்பா வேதை பார்த்து நெடுநாளு மிருந்தே வாழ்ந்தார்

திருமூலர் கூடுவிட்டுக் கூடுபாய்தல்

இருந்துதான் யோகமுற்றார்இவரைப்போல் யார்தான்வாழ்ந்தார்
சிறந்திடுந் திருமூ லர்தான் கைக்கோளச் சாதியாகும்
பெருத்திடுங் கற்பங் கொண்டு பேர்பெறக் குகையில் வாழ்ந்து
வரத்துட னிருக்கும்போது வந்ததோர் வகையைக் கேளே

கேளப்பா சடத்தைத் தானுங் கிரியிலே வைத்து விட்டு
வாளப்பா கெவுனம் பாய்ந்து மார்க்கமாய் வருகும்போது
நீளப்பா சத்திரிய ராஜன் நேர்மையாய் மகளுக்குத் தான்
ஆளப்பா விவாகஞ் செய்து அன்றுதான் முடித்த பின்பே

முடித்ததோர் மறுநாள் தன்னில் முழுமோச மாகஅன்று
மடித்ததோர் மாப்பிள்ளை தானும் வகையுட னிறந்து போக
துடித்தன ருலகி லுள்ளோர் சொல்லியே அழுத சத்தம்
விடுத்துமே திருமூ லர்தன் செவியினில் மிகவுங் கேட்டு

கும்மிச் சந்தம்.

காதினிற் கேட்டுத் திருமூல ரன்று
கவலை மாற்றிட வேணுமென்று
நீதி செலுத்து மகராஜன் கூட்டினில்
நேர்மை யுடனவர் தான்பாய
மயக்கம தாக யிருந்தவர் போலவே
மக ராஜன் றானுமெழுந்திடவே
தியக்கம தாக யிருந்த ஜனங்களும்
சிறப்பாய்ச் சந்தோஷ முற்றிருந்தார்

மற்றோருற் றோரும் மகிழ்ந் திருக்க இந்த
மாப்பிள்ளை பெண்ணும் பஞ்சணையில்
சற்றே படுத்துச் சந்தோஷ முற்றுப் பின்பு
தானிருந் தார்வெகு காலமட்டும்
தாகம தாக யிருபேரு மொன்றாகச்
சந்தோஷ மாக யிருக்கையிலே
மோகத்தி னாலேமுன் வந்தசரிதையை
முற்றிலு மங்கே மொழிந்து விட்டார்

என்றைக் கிருந்தாலும் மோசம் வருமென்று
எண்ணியே மாது இவரிடத்தில்
நன்றான வார்த்தை பலதுகள் பேசியே
நன்மை யுள்ளசட மெங்கேயென
கேட்ட வுடனே குகையிலிருப்ப தாய்க்
கெம்பீர மாகவுஞ் சொல்லி விட்டுத்
தேட்ட முடனதை யாருஞ் சுடாரென்றும்
தீயிடுஞ் சேதியுஞ் சொல்லி விட்டார்

இந்த வகையெல்லாங் கண்டுகொண்டு அந்த
எந்திழையாளும் புலையர்களை
விந்தை யுடனங்கு தானனுப்பிச் சட
விபரங் கூறியே வாக்களித்தாள்
மலையினிற் சென்று குகையிற் பார்க்கையில்
மாதுசொன்ன சடந் தானிருக்கப்
புலையர் கூடிச் சடைத்தை மருந்துகள்
பூட்டியே மாட்டினார் தீயதனை

வெந்துநீ றாகியே போனபின்பு அதில்
மிக்க அஸ்திகளைத் தானெடுத்துச்
சந்தோஷ மாகவே ராஜாத்தி தன்னிடம்
தான் காட்டிப் போயினா ரேபூலையர்
இப்படியாக இதுமுடிந்ததென
யாருக்குந் தோணாம லேயிருக்கச்
செப்பமுள்ள திருமூல ராஜனும்
சிறப்பாய் வேட்டைக்குத் தானெழுந்து

வேட்டைக ளாடி முடிந்தபின்பு மலை
மீதிலிருக்குங் குகையினிற் போய்
தாட்டிக மான சடத்தையுங் காணாமல்
தவித்து மயங்கியங் கேயிருந்து
வச்சிரத் தேகமுஞ் சுட்டுக்கிடப்பதை
மனதாரக் கண்ணாலே தான்பார்த்து
உச்சித மாகத் தெரிந்து கொண்டு பின்பு
ஊரினி லேவந்து சேர்ந்திருந்தார்

இந்தப் படியிவர் தானிருக்க இவர்க்
கினிமையாகிய சிஷனுந்தான்
விந்தையுட னெங்குந் தான்தேடி இங்கு
விருப்ப மாகவே தேடிவர
சிஷன் வருவதைக் கண்டுதிருமூலர்
செய்திகள் யாவு மவரிடத்தில்
நேச முடனசொல்லச் சிஷனுங்கண்டு
நெடுஞ்சான் கடையாக வேதானும்

பாதத்தில் வீழ்ந்து குருவென் றறிந்துபின்
பத்தியொடுசில வார்த்தை சொல்லி
நீத முடனேதான் தேடினசங்கதி
நேர்த்தியாய்ச் சொல்லி முடித்துவிட்டு
அன்றங்கு ராத்திரி தானிருந்துபின்
அருமையுள்ள மனையாள் தனக்கும்
சென்றங்கு ஓர்சேதி சொல்லாம லிவர்
சேர்ந் தங்கிருவருந் தானேகி

காடு மலைகள் கடந்துகுகைதனைக்
கண்டுயிருவரு மங்கிருந்து
தேடியே கற்பங்கள் சாப்பிட்டுப் பின்பவர்
தேகசித்தி செய்து கொண்டிருந்தார்

விருத்தம்.

கொண்டுட னிருக்கும் போது குகைதனில் வைத்த சாஸ்திரம்
விண்டுமே தேடிப்பார்த்து வியப்புடன் காணு மென்று
எண்டிசை சித்தரோடு என்னையும் வினவிக் கேட்டார்
கண்டுதான் கேட்டா ரென்று கருத்துட னிருக்குதென்றேன்

இருக்குதென் றிசைத்தே னிந்த இயல் புள்ள சாஸ்திரத்தை
பெருக்கமாய்ப் பின்னுங் கேட்டார்பேணியே கொடுக்காமற்றான்
சுருக்கமாய்ச் சொல்லிவிட்டுச் சுகமுடன் வரையிற் சென்றேன்
உருக்கமா யுனக்குப்பின்னே உண்மையை விரித்துச்சொல்வேன்

காலாங்கி நாதர்.

அன்றுகா லாங்கி நாத ரவரும்வே ளாள ராகும்
சென்றங்கு காயசித்தி செய்திடக் கற்பமுண்டு
என்றுமே அழியாத்தேக மெய்தியே மலையில் வந்து
நன்றுள குகை யிருந்தே நாட்டமாய் வாழ்ந்தார் பாரே

தன்வந்திரி.

பாரப்பா தன்வந்திரியும் பண்புள விஷ்ணு அம்சம்
நேரப்பா பிர்மஜாதி நெறியுள கற்பங் கொண்டு
சீருடனனேக சாஸ்திரம் செய்தன ரிவருந்தானும்
தேறுத லாக வென்றால் சிறந்தசாஸ் திரத்தைப் பாரே

யூகி முனிவர்.

திரமுள முனிவர் யூகி செய்தகா வியங்கள் ரத்தினம்
உரமுள கம்பளத்தி லுற்றவ ரிவருந் தானும்
வரமுடன் தபசுசெய்து வகாரத்தில் பேரும் பெற்றுத்
தரமதாய்ச் சித்த ரோடு சார்ந்துமே வந்தார் நேரே

தேரையர்.

வந்ததோர் தேரையர்தான் மகாசித்தர் நூலில் வல்லோர்
அந்தநல் லகஸ்தியர்க்கு அருமையாய் வந்தபிள்ளை
குந்தக்க மில்லாப் பிர்ம குலத்தினில் வந்துதித்தோர்
விந்தையாய்க் காயசித்தி மிகச்செய்து முடித்தார் பாரே

முடித்திடுங் காரியங்க ளொருவரும் முடிக்கவில்லை
படித்திடுஞ் சாஸ்திரங்கள் பற்பல விதங்களுண்டு
எடுத்திடுங் கற்பங்கள்தா னியாவருங் கொள்ள வில்லை
தடுத்தவ ரிடத்தில் வந்து தான்கேட்பா ரோதான் சித்தர்

சித்தர்கள் முனிவரிந்தச் செயலதை யடைந்த சங்கை
உத்தம மாகத் தானும் உந்தனுக் குரைத்த செய்தி
வித்தகா அறிந்து கொள்வாய் மேதினியோர் களுக்குச்
சித்திக ளறிந்தா லிந்த விதம்வரு வார்தெரிந்தே

தெரிந்துதான் கூடுவிட்டுச் சிறப்புடன் மறுகூ டேகித்
தெரிந்துதான் வருவார் பின்னுந் தெரியாம லேகமாட்டார்
தெரிந்திதைச் செய்யா விட்டால் தேகமுஞ் சித்தியேது
தெரிந்துதான் மறுகூடேகித் திரிந்துமே வருகுவாரே

ஜாதியெனக் கூறல்.

வருவதும் போவதுவு மாயிருந்தால்
வகுத்துரைக்கச் சாதிவகை முடியுமோ தான்
அறிவுவர உலகோர்க்காய் ஜாதி சொன்னேன்
அல்லாரு மொருஜாதி யல்லால் வேறு
பிரியமுடன் பரகாயப் பிரவே சந்தான்
பெரியோருஞ் சித்தர்களுஞ் செய்து கொள்வார்
உரியபடி கூடுவிட்டுக் கூடுபாய்தல்
உலகத்தில் சித்தருக்கு வழக்கமாமே

வழக்கத்தைச் சொல்லுகிறேன் நன்றாய்க் கேளு
வகையுள்ள முனிவர்சித்தர் மாறிமாறிப்
பழக்கமுள்ள கூடுவிட்டுக் கூடுபாய்வார்
பாய்ந்தவருங் காலமட்டு மிருந்து வாழ்வார்
முழக்கமுடன் பின்புவந்து தன்சரீரம்
முழைந்து கொள்வார் தன்சரீரந் தப்பிப் போனால்
இளக்கமுள கற்பமது சாப்பிட்டேதான்
இனிமையுடன் சடலமதைப் பெலஞ்செய் வாரே

பெலஞ்செய்வா ரதைவிட்டு மறுகூடேகிப்
பின்புமொரு கூடதனிற் பாய்ந்து வாழ்வார்
நலமுடனே அவர்கள் செய்யுந் தொழிலையேதான்
நானெடுத்துச் சொல்ல வென்றால் நாவோயில்லை
பலமுடனே பரகாயஞ் செய்யும் போது
பார்த்தாக்கால் வெகுசுருக்கு அதிதம் மெத்த
தலமுடனே தன்சரீர மொளித்து வைக்கத்
தான்செய்து வைத்துவைக்குங் குகையைப் பாரே

பாரப்பா கிரேதாயில் ரெம்ப ஆட்டம்
பண்பாக ஆடினார் சித்தரெல்லாம்
வீரப்பா திரேதாயில் அட்டசித்தும்
வேடிக்கை விநோதங்கள் செய்து வந்தார்
சீரப்பா துவாபரையி லனேக சித்தி
செய்தவர்கள் நல்லதொரு பேரும் பெற்றார்
காரப்பா கலியுகந்தான் போகுமட்டுங்
கண்மூடிச் சிவயோகங் கண்டார் பாரே.

சித்தர்கள் மகிமை—வெண்பா.

மாடப் புறாவின் மலத்தை யெடுத்து வந்து
சாடிடுமைங் கோலத் தயிலமே—கூடவே
ரேகித் தரைத்தேதான் நெற்றியினிற் பொட்டிடவே
ஆகத்தைக் காணார்க ளாம்.

ஆறென்று தேவர்களும் ஆகத்தைக் காண்பதில்லை
கார்நீண்ட வாற்குருவி கண்டாக்கால்—சீருடனே
இந்தக் குருவிதனை எட்டிவிற காற்சுட்டுப்
பந்தமுள்ள பாரையிலே பற்பம்

பற்பஞ்ச மூலம் பொடிபண்ணிப் பண்பாகப்
பற்பஞ் சிமிழிற் பதனம்பண்—பற்பமது
சற்றெடுத்து நீர்விட்டுத் தானரைத்துப் பொட்டிடவே
கற்றரும்பர் கண்ணிற்கா ணார்

காணார்கள் தேவற்முதற் காணார்கள் மானிடர்கள்
காணார்க ளாருமிதைக் கைகண்டோம்—பேணவே
இந்தத் திதை மிருக்கவே வேணுமப்பா
எந்தநல்ல சித்தர்க் கிது

இதுநல்ல மையென் றிசைத்தே னுன்க்குச்
சதுரா யொருவருக்குந் தான்காட்டா—மெதுவாய்
நல்லபிள்ளை யென்று நானுரைத்தேன் இத்தைச்
சொல்லா தெவர்க்குந் துணிந்து

துணிந்து கொள்வ தென்னவெனிற் சூதகற்பந் தின்று
பணிந்தவா போகரைநீ பண்பாய்த்—தணிந்தே
வார்த்தை மொழிபேசும் மனோன்மணியின் பாதமதிற்
கார்த்திருந்து பேருபெருங் கற்பம்

### கோச்சகம் வல்லாரைக் கற்பம்.

கற்பம்வல் லாரைதனைக் கொள்ளுதற்குக் காரணங் கேள்
அற்ப நரைதிரையும் யாவுமே தான்மாறும்
எப்போதும் நன்று யிருப்பா னிதுதவறு
தப்பாம லோர்வருடந் தான்விரும்பிக் கொள்வாயே

கொள்ளுவர் னேயாகிற் கூறும்வய தைக்கேளாய்
வள்ளலென்ற பேராய் வயறுபதி றைதுபோல்
தெள்ளுதமிழ் வல்லவனாய்த் தேறியே சித்தனைப்போல்
வள்ளலென நூறு வயதுவரை தானிருப்பான்

இருப்பான் வெகுநா ளியல்புடனே தானும்
வருத்தும்வல் லாரைச்ச மூலத்தைத் தான்கழுவி
விரித்து நிழலுலர்த்தி மேனிப்பின் சூரணஞ்செய்
கருத்தை யிருத்திநன்றாய்க் கற்பத்தைக் கொள்வாயே

### குமரிகற்பம்.

கொள்ளப்பா கற்பத் திற்குக் குமரியின் சாறெடுத்து
மெள்ளவே கழுவிநன்றாய் வியப்புடன் வைத்துக் கொண்டு
தெள்ளறத் திரிகடுகு சிறந்ததோர் பொடியாய்ச் செய்து
வள்ளலா யிருப்பதற்கு வாய்ந்ததோர் பசுநெய் தொட்டே

வாய்ந்திடுங் கற்ப மப்பா வருடம்நீ கொண்டாயானால்
காய்ந்திடுந் தேகங் கூடக் கடுஞ்சிவப் பேறி நன்றாய்
ஆய்ந்திடும் அழகனாகி அத்தனைப் போல வாழ்வான்
தோய்ந்திடுஞ் சாஸ்திரங்கள் துரிதத்தில் கற்பான் பாரே

### நொண்டிச் சிந்து—குஷ்டந்தீர.

பாருசில் கற்பமெனும் — கார்க்கோலரிசி
பாங்காக வாங்கிவந்து சூரணஞ்செய்து
வாகுபெறத் தேனிலப்பா — வெருகடி
வகையுட னருந்திடக் குட்டந்தீரும்
ஆவின்நெய்யில் ஏழுநாட் கொள்ளப் — பவுந்திர
மாகிய குட்டமுந் தீருமப்பா
இந்தச்சூ ரணத்துடனே — வாய்விளங்க
மிடித்துச் சூரணம்பண்ணித் திரத்துடனே

இரண்டுவகைச் சூரணமும் வகையுட
னிரண்டு வெருகடியாய்த் தானெடுத்துக்
கோமூத் திரந்தனிலே போட்டுக்
கொள்ளவே பதினெட்டுக் குட்டமுந் தீரும்
திட்டமாய்ச் சூரணத்தை வெண்ணீறிற்
சிறப்புட னுருமண் டலங்கொளவே
புத்தி விசாலமதாய் வயதுநூறு
பூலோகந் தன்னிலே வாழ்ந்திடுவான்

திப்பிலிச் சூரணஞ்செய்து வாய்விளங்கஞ்
செய்துசூ ரணத்துடன் தான்சேர்த்து
இரண்டும் வெருகடியா யெடுத்து
இன்ப முடனேதேனிற் கொண்டுவர
சகல வியாதியும்போம் முன்னஞ்
தான்சொன்ன கற்பத்தை வருடங் கொண்டால்
பதினாறு வயதுடைய குமரன்போல்
பாலிய னாகவே தானிருப்பான்

இருநூறு வயதிருப்பான் வல்லாரையி
னிந்தகற்ப முண்டவர்க்குப் பத்தியங்கேள்
ஆவின்நெய் பாலாகும் குருவை
அரிசிச் சோறுந்தேனு மாகுமப்பா
மற்றொன்று மாகாதப்பா தேகத்தில்
வரும்பச்சைத் தண்ணீர் படலாகாது
பேசவு மாகாது வெகுவார்கம்
பெண்ணாசை ஸ்ரீசங்கை யுதவாது

கடும்பத் தியமாக யிருந்து
காத்தவர்க்கு மிக்கதொரு சித்திகளுண்டாம்
பத்தியத்தை விட்டவர்க்கு தேகம்
பாழாகப் போகுமென்று குருவுரைத்தார்
உடனே மறுகற்பங் கொள்ள
உதவாது தேகத்துக் கழிவுவரும்
மண்டலஞ் சென்று கொண்டால் நல்ல
மகத்துவ மும்பெறலாம் இகத்தினிலே

ஏந்தநல்ல கற்பத்துக்கும் • தீலையி
லெண்ணைவைக்கத் தேவையில்லை முன்னமே சொன்னேன்
பால்மிளகுதனைத் தேய்த்துக் கொண்டு
பக்குவ மாகவே முழுகிடலாம்
வல்லாரைக் கற்பத்திற்கு ஏதுவு
மாகாது தண்ணீர்விட லாகாது
கற்பம் முடிந்தபின்பு வாரங்
கழித்தபின் பால்மிளகு தேய்த்திடலாம்

பிலாக்கொட்டைத் தயிலக் கற்பம்.

உச்சிதப் பிலாவின் கொட்டை உசிதமாய்த் தயிலம் வாங்கி
வச்சிடாய் பழமை கொண்ட கலசத்தில் வைத்து நன்றாய்
நிச்சயத் தயிலம் மூன்று களஞ்சிதான் நெய்யிற் கொள்ள
பச்சையாய் மூர்ச்சை போகும் பசுவின்பால் குடிக்க நிற்கும்

ஐய்யமென் கருங்குருவை அரிசிவெந் திட்டசோறு
நெய்யொடு பாலுமாகும் மற்றொன்று மாகாதப்பா
மெய்யதா யெழுநாள் கொள்ள விரியும்பா தாள லோகம்
செய்யவே தெரியும் தேகம் சித்தியு மாகுமீதே

ஏதப்பா வென்றால் மாதமிப்படிக் கொண்டா யானால்
நாதன்சீ பகலிலேதான் நச்சேத்திரந் தெரியு மப்பா
நீதம்பார்த் திருந்து பூவை நிழலிலே யுலர்த்திக் கொண்டு
போதப்பா சூரண மாகப் போதவே தேனிற் கொள்ளே

கொள்ளப்பா வெருகடிதான் கொண்டுவா வொருமாதந்தான்
வெள்ளைபோல் நரைத்திருந்தால் மிகவுமே மாறிப்போகும்
வள்ளலே இருநூறப்பா வயதுதா னிருக்க லாம்பார்
கள்ளங்க ளில்லையப்பா கற்பத்தைக் கொண்டு பாரே

வேறு விருத்தம்.

பாரப்பா வெண்நாவி உமிநீராலே
பண்பாக உரைத்தேதான் குருவிற் பூசிப்
பாரப்பா வெயிலில் வைக்கச் சுண்ணமாகும்
பாங்காக யிருமருந்துஞ் சரியாய்த் தூக்கிப்
பாரப்பா மாகுருவுக் கப்பிப்போடு
பதிவான குருவதுவும் காரமாகும்
பாரப்பா மண்ணுப்பிற் குக்குடத்திற்
பரிவுடனே புடம்போடக் குருவாகுமே

குருவான நாய்ப்பாகற் றயிலத்தோடு
குருவொருமாக் கூட்டிவிடு முன்னே சொன்னேன்
குருவான நிதனுடனே துருசுசேர்த்துக்
குதராமற் றுருசதற்குப் பூசியேதான்
குருவாக ரவிமுகத்தில் ஒருநாளிற்றான்
கொண்டுமே வைத்தெடுக்கச் சுண்ணமாகும்
குருவாக விதுதானுஞ் சேராவிட்டாற்
குவலயத்திற் சுண்ணமது தான்காணாரே

கும்மிச்—சந்தம்.

கும்மியடி பெண்ணே கும்மியடி ஆதி
குருவை நினைந்து கும்மியடி
நம்மிலுங் கோடி அதிதுருசுக்குரு
நாட்ட முடன்கண்டு கும்மியடி
நங்குரு வான துருசின் குருகண்டோர்
நாலாயி ரம்ரெட்டிப் பாகுமிது
அங்குருவாகிய மாகுருத்தானது
அருமைய தாய்க்கார மேறுதடி

எங்குரு வாகிய நாவியடி அது
இனிமை நாடக மாடுதடி
தங்குங் குருவு மிதுதாண்டி பார்த்துத்
தானுவர்ப் பூவால் தேறுதடி
கடலி லிருக்கின்ற தண்ணீரை யவர்
கட்டுடன் மேட்டினிற் றனிரைத்து
அடவி ரவிமுகங் கண்டல்லவோ இது
ஆகத் தருந்தஉப் பாச்சுதடி

ஆகத் தருந்திட அங்கங் களிப்பாக
அப்பா சிறுநீரி லுப்பாச்சு
தேக மருந்திடும் ரெண்டுமப்பா சிவ
சித்தா யிருந்த சிவமாமே
சிவனைக் கண்டு பராசத்தி சேர்ந்திடச்
சென்றிடுஞ் சத்திக்குப் பேருவர்ப்பு
தவசு பொருந்துங் குருவாகும் இந்தச்
சத்தி பனியில் விளைந்ததடி

பகலவ னாலே வெளுப்பாச்சு பரி
பூரண மாகிய நீராச்சு
பகலவன் கண்டகல் லுப்பாச்சு கண்டு
பாருந் தொழிலிதைப் பாருங்கடி
பச்சைத் துருசு வெளுப்பாகப் பாரிற்
பார்க்கப்போ னலிது உப்பாகும்
வச்ச துருசு வெளுப்பாச்சு கண்டு
வாழ்த்திக் கும்மி யடியுங்கடி

பாக்கு வெற்றிலைச் சுண்ணாம்பு அந்தப்
பள்ள னுக் கெத்தனை வீராப்பு
போக்கறி யாதவன் கையினிற்பெண்டு
புதுசாய்க் கொடுத்தாலே தாருமடி
சவ்வீரந் தோழமைச் சூடனடி யிதால்
தரணியி லெந்தச் சரக்குஞ் சுண்ணம்
சவ்வாசு கெட்டி யென்றே சொல்லி நீங்கள்
தானே கும்மி யடியுங்கடி

விருத்தம் - கீழ்காய் நெல்லிக் கற்பம்.

பூசமுடன் குருவாரங் கூடும் நாளில்
புகழ் பெறவே கற்பமது கொள்வாயப்பா
வாசங்கீழ் காய் நெல்லிச் சமூலந்தன்னை
வளம்பெறவே நிழல்தனிலே யுலர்த்திக் கொண்டு
நேசமுடன் சூரணமே செய்து பின்பு
நெய்தேனுஞ் சீனியுமொன் றாகக்கூட்டி
ஆசையுடன் தானருந்தக் காயசித்தி
யாகுமிது கற்பமுறையிதுதான் சொன்னேன்

சொன்னேன்நான் பத்தியங்கள் நெய்யும் பாலும்
சோறுமல்லால் மற்றொன்று மாகா தப்பா
மன்னனே அரைவருடங் கொண்டாயாகில்
மகாகுட்டம் பதினெட்டுந் தீர்ந்தே போகும்
நன்னயமா யொருவருடங் கொண்டா யானால்
நல்லமதி புத்தியது மயங்கா தப்பா
என்றுபதி னாறின வயதுபோல
இருநூறு வயதுவரை வலுமை தானே

### தூதுவளைக் கற்பம்.

வலுமையென்ன ஏழானைப் பெலமுண்டாகும்
வந்தொரு தூதுவளைச் சூரணஞ் செய்து
மலையாதே யிருவகைச்சூ ரணமுங்கூட்டி
மனதுபோல் வெருகடிநீ கொள்வா யப்பா
உலையாமல் மூன்றுமண் டலந்தான் கொள்ளு
உகமுடிந்து மறுபிறவி யில்லையப்பா
அலையாமற் பிறக்கிறதுஞ் சாவதுந்தான்
அவனிதனில் வழக்கமென்று சொல்லலாமே

### கையாந் தகரைக் கற்பம்.

சொல்லுவே னின்னங்கேள் கற்பமப்பா
சுகமாங்கை யாந்தகரைச் சமூலம் வாங்கிச்
சொல்லுவேன் ஞாயிறுடன் பூசங்கூடில்
சுகமான நாள்தனிலே யுலர்த்திக் கொண்டு
சொல்லுவேன் சூரணஞ்செய் வெருகடிதான்
தோன்றிடவே காடியிலே குழைத்துத் தின்பாய்
சொல்லுவேன் பத்தியங்கேள் கத்தரிக்காய்
சூழ்பாகற் காய்கடுகு ஆகாதென்னே

ஆகாது மற்றதெல்லா மாகுமப்பா
அப்படியே ஒருமாதங் கற்பங்கொண்டால்
வேகமுடன் சகலவியா திகளுந்தீரும்
விருப்பமுடன் மாசம்ரெண்டு சாப்பிட்டாக்கால்
தாகமுடன் பதினெட்டுக் குட்டந் தீரும்
சரிமூன்று மறுமூன்றுந் தான்கொண்டாக்கால்
பாகமுடன் வியாதிக ளெல்லாந் தீர்ந்து
பண்ணோடே சங்கீதம் பாடுவானே

பாடுவான் பதினென்பா சையிலும் நன்றாய்ப்
பண்பான சுரக்கியானம் பாடுவார்காண்
தேடுகின்ற மலைசெடிகள் தங்கிவாழ்வான்
சிறப்பாகத் தான்பத்து மாதங்கொண்டால்
கோடுபெற்ற முந்நூறு வயதிருப்பான்
குமரனாய்ப் பதினாறு வயதுபோல
நீடுபெற ஒருவருடங் கொண்டா ராயானால்
நிசமாய் ஆயிரவருடம் நிற்பான் நேரே

### நாறுகரந்தைக் கற்பம்.

நெறியோடே வாழ்வதற்குக் கற்பங்கேளு
நிசநாறு கரந்தையுட கற்பந் தன்னைப்
பெருபூர்வ பட்சபிர தமையிலப்பா
பேதமில்லாப் பவர்ணெசஷ்டி பஞ்மீதான்
திரிதிகையா மிதுகளிலே பூசமோனம்
சேருதற்கு ரோகணிநா ளதுவந்தாக்கால்
உருதியுட னபிஷேகஞ் செய்துகொண்டு
உற்பனமாய்ப் பழந்தேங்காய் தூபங்காட்டே

காட்டியபின் செடியதனை யப்பா நீயும்
கரந்தைசமூ லம்வாங்கி நிழலுலர்த்தி
வாட்டமிலாச் சூரணமாய்ச் செய்துகொண்டு
வகையாக வெருகடிதான் நெய்யிற் கொள்ளத்
தாட்டிகமா யொருமாதந் தின்பாருகில்
சத்தியமாய்ப் புத்தியுண்டாம் ஞானமுண்டாம்
கோட்டி யில்லாக் கற்பமிது பத்தியங்கேள்
குருவையரி சிச்சாதம் நெய்யும் பாலாம்

ஆமென்றும் மற்றொன்று மார்க்கப்பா
ஆனகற்ப மிரண்டுமா தந்தான் கொண்டால்
பூமிதனில் நடக்குமொரு வதிசயங்கள்
புகழ்பெறவே தெரியுமப்பா கெதியுந்தங்கும்
வாமமுட னரைவருடங் கொண்டா யாகில்
வகையாக மகாசித்தி யடையலாகும்
காமவலைக் குட்படவு மாகாதப்பா
கருத்தான கற்பமிந்தக் கற்பங் கேளே

கேளப்பா நாழிகையோ சனையின் தூரம்
கெடியாகப் போய்வரலாம் கெவுனமார்க்கம்
கேளப்பா ஆகாச கெவுனம்பாய்வான்
கெவுன சித்தி யட்டசித்தி வச்சிரகாயன்
கேளப்பா ஒருவருடங் கொண்டானானால்
கிலேசமிலை வயதுபதி னாறுதோன்றும்
கேளப்பா வருடமா யிரமிருப்பான்
கிருபையுள்ள கற்பமிது கொண்டு பாரே.

## பேச்சுரையின் கற்பம்.

பாரப்பா பேச்சுரையின் விதையைத் தானே
பழகினயெண் ணெய்க்கலசந் தன்னில் வைத்துப்
பாரப்பா தயிலமது களஞ்சிமூன் று
பண்பாக யிந்தயிடை பாலுங்கூட்டிப்
பாரப்பா பாலிடைக்கு நெய்யுங் கூட்டிப்
பரிவாக நெய்யிடைக்குத் தேனுங்கூட்டிப்
பாரப்பா கற்பமதைக் குடிக்க மூர்ச்சை
பண்புடனே யாமிதற்கு வகைசொல்வேனே

சொல்லுவேன் தயிலமதைப் பிடரிகைகால்
தோன்ற உள்ளங் காலுமே தடவச் சொல்லு
வல்லென்று பயமீறித் தெளியுமப்பா
வண்மையிந்தப் படிகருயிரு பதுநாளுண்ணச்
சில்லென்று சரீரமது பேதிக்குங்காண்
தேவனைப்போற் காணுமடா தேகசித்தி
வல்லமையாய் மாதமே மூன் றுகொண்டால்
வயததுவும் மூந்நூறுக் கிருப்பான் பாரே

## இருப்பவலின் கற்பம்.

இருப்பான்காண் சாகாம லிருக்கக்கற்பம்
இன்னங்கே ளிருப்பவலின் கற்பங்கொள்வாய்
விருப்பமுட னையாளஞ் சொல்லக்கேளு
மீறுகின்ற பாம்புபோற் கொடிபடர்ந்து
இருக்குங்கா ணதின்கிழங்கு பெரிதாகத்தான்
இருந்தமொரு கிழங்குதனை யெடுத்துக் கொண்டு
திருவாக நிழலுலர்த்திச் சூரணித்து
திரமாக வெருகடியாய்த் தேனிற்கொள்ளே

கொள்ளப்பா மண்டலந்தான் முடிந்தபின்பு
கூறக்கேள் நரைதிரையு மில்லைகண்டாய்
வள்ளலாய் மூந்நூறு வயதிருப்பான்
வாய்த்தமொரு கிழங்கினுட சாற்றிற்சூதம்
மெள்ளவே மத்தித்துக் குகையில் வைத்து
விருப்பமா யுருக்கிடவே குளிகையாகும்
கள்ளமில்லாக் குளிகையை யிருக்கச்சித்தி
கனத்தமூ லிகையைச்சேந் தாரிப்பாயே

## செந்தூரம்.

செந்தூர வகைசொல்வேன் கேளுகேளு
செவ்வரளிக் கிழங்கரைத்துப் பொதிந்துதானே
செந்தூரம் முப்புடமாம் முருக்கம்பூப்போற்
தேறுமே யொருமாத்து வெள்ளிநூறு
செந்தூரங் கொடுத்திடவே வேதையாகும்
தீர்க்கவர்ணஞ் சதபேதி திட்டமப்பா
செந்தூரம் பணவிடையாய் மண்டலந்தான்
தின்றக்கால் மலமூத்திர வேதையாமே

ஆமப்பா வச்சிரமிட்ட காயமாகும்
அட்டசித்தி கெவுனமுண்டா முமிழ்நீராலே
ஆமப்பா சூதத்தைக் கட்டிவைக்கும்
அறுபத்து நாற்சரக்குங் கட்டிவைக்கும்
ஓமப்பா அவர்களுட அமுதத்தாலே
உச்சிதமாம் வேதைகளும் பெரிய்யா தப்பா
காமப்பா கற்பத்தின் விபரஞ் சொன்னேம்
காதாந்தக் கியானமுற்று நல்குவானே

## நீலி கற்பம்.

நல்குவோம் நீலிகற்பங் கொள்வாயப்பா
நலமாக அவுரியது சமூலம் வாங்கிச்
செல்குவாய் நிழலுலர்த்திச் சூரணஞ்செய்
திரமாஞ்செந் தூரமுடன் சீனிகூட்டி
வல்லதொரு கெந்தகந்தான் சுத்திசெய்து
வந்தகுருச் சக்கரையுங் கூட்டிக்கொண்டு
அல்லதொரு கற்பமிது வெல்லாமொன்றாய்
அப்பனே சரிசமன தாகச்சேர்த்தே

சேர்த்தகற்பம் வெருகடிய தாயெடுத்துச்
செப்பமுட னரைவருடங் கொண்டாயாகில்
வார்த்தைமிச கில்லைகூன் கிழவன்றானும்
வாலையாய்ப் பதினாறு வயதேயாவான்
கார்த்தவனு மொருவருடங் கொள்வானாகிற்
கருணைபெருஞ் சகலசித்தி யுண்டாமப்பா
பார்த்ததொரு கற்பமிது கொள்ளவாண்டு
பாரில் மூந்நூ றென்றுதான் பகர்வார்தானே

வேம்பின் கற்பம்.

தானவனும் வேம்பினுட கற்பந்தன்னைத்
தாரணியில் சித்தர்களே சாற்றக்கேளு
மானமொரு கார்த்திகையாம் மாதந்தன்னில்
வாழ்மிருக சீரிடமும் பூசந்தன்னில்
ஏனமுதற் சலமிக்க கொழுந்தைக்கிள்ளி
இன்பமுடன் தின்றுவா யிருபத்தேழ்நாள்
ஆனதொரு சர்ப்பங்கள் தீண்டினாலும்
அநுபட்டுப் போகுமப்பா அறிந்துகொள்ளே

கொள்ளப்பா மாதமொன்று கொண்டாயாகில்
குஷ்டமென்ற பதினெட்டு வகையுந்தீரும்
துள்ளுகின்ற பூதமொடு பசாசுதானும்
துடிதுடித்துக் கண்டவுட னோடிப்போகும்
விள்ளுகிறேன் பொடிசெய்து கொழுந்து தன்னை
வெருகடியாய்த் தேனிலரை வருடங்கொண்டால்
வள்ளலே நரையோடு திரையு மாறும்
வாலிபமுந் நூறுவய திருப்பான்றானே

இருப்பதொரு வேம்பின்மரந் துளைத்துத்தானே
இன்பமுடன் மேல்நோக்கிச் சிலாகை தாக்கி
திருப்பாணி யாகுமப்பா மற்றொன்றுகா
திதன்கீழே பழகினதோர் பாண்டம் வைத்து
மருப்பிலா துபாயமா யதனைமூடி
மண்டலந்தான் சென்றபின்பு தயிலந்தானும்
விருப்பமுடன் தயிலமங்கே யிறங்கிநிற்கும்
மீண்டுநீ தயிலமதை யெடுத்துக் கொள்ளே

எடுத்துவந்த தயிலமப்பா களஞ்சிமூன்று
இந்தஇடை தேன்கூட்டிக் குழப்பிக் கொண்டு
திடமாக மண்டலமே கொண்டாயானால்
திரையுமில்லை நரையுமில்லை செப்பக்கேளு
அடவாக அதிசயங்க ளனேகங்காணும்
ஆரூதா ரங்களெல்லாம் வெளியாய்க்காணும்
இடமாகக் காரியங்கள் செயங்கொள்வாய்நீ
இன்பமனே கரணுக யிருப்பாயென்னே

என்னேகே எவ்வண்ணந் தானேயாவாய்
இயல்பாக அரைவருடங் கொண்டாயானால்
உண்ணியே பதினாறு வயதுபோல
உறுதியாய் வயிரசடம் உமிழ்நீர்வேதை
மன்னனே யாகாச கெவுனசித்தி
வல்லமையாய்ப் பூவுலகில் வசிக்கலாகும்
சொன்னபடி யொருவருடங் கொண்டாயாகில்
தொலையாத காயசித்தி வேம்பின் கற்பம்.

## சோதிப்புல் கற்பம்.

கற்பந்தான் சொல்லுகிறேன் சோதிப்புல்லுக்
கடையாளம் நாலுவிரற் கடையுயர்ந்து
சிற்பமா யிருக்குமப்பா யிலைபுற்போலே
தீபம்போ லொளிகாணு மிதுக்குப்பேர்கேள்
அற்புதம தானதீப் புல்லென்றும்பேர்
அனல்கொண்டு பொங்குமது சோதியாகும்
கற்பதமா யிம்மூலி பாலிற்போட
நல்லதொரு சோதிப்புல் லாகுந்தானே

தானென்ற மூலிகைதான் சமூலம் வாங்கித்
தானிடித்துச் சூரணந்தான் செய்வாயப்பா
கோனென்ற பேய்ச்சுரையின் காய்க்குடுக்கைக்
குள்ளடைத்துப் பதனமாய் வைத்துக்கொண்டு
கானென்ற களஞ்சிபொடி பாலிற் போட்டுக்
கரைத்துநீ குடித்துவரக் கற்பமப்பா
தேனென்றே யதையருந்த மூர்ச்சையாகும்
தெளிந்துவிடும் புல்பொடியைப் பின்புகேளே

## துவாலையிடல்.

கேளப்பா களஞ்சிபொடி சோத்திலிட்டுக்
கிரிகையுடன் முழுங்கிவிடு பின்புசொல்வேன்
நாளப்பா களஞ்சிபொடி செலத்திலேதான்
நயமாகக் குடித்துவிடு மூர்ச்சை போகும்
வேளப்பா ஆவரைவேர் கொழுந்துங்கூட்டி
விருப்பமுடன் தேகமெல்லாந் துவாலைபோடு
கேளப்பா காந்தையுஞ்சீ தாரியுந்தான்
கிருபையுடன் புகைக்கவே மூர்ச்சைமாறும்.

மூறியபின் பாலுஞ்சோ றுண்டுமப்பா
மயமான நெய்சோறு வேமுன்றுகா
தேறியே யவ்வித மேழுநாள்தான்
திடமாகக் கொள்ளுமப்பா தேகந்தன்னில்
ஊறியே உடற்சட்டை களட்டுமப்பா
உற்றயிலை யரைத்துதுத்தத் துக்கப்பி
ஆறியே புடம்போடத் தங்கஞ் செம்பாம்
அறிகுவாய் வேதையினி விள்ளுவேனே

வேதைச்செம்பு.

விள்ளுவேன் வேதையப்பா சொல்லக்கேளு
வெள்ளியிரு பதுக்கொன்று சேர்க்கவேதான்
ஒள்ளியதோர் பதினாறு மாற்றுமாகும்
உத்தமனே யின்னும்வகை யுரைக்கக்கேளு
அள்ளியதோர் ஸ்திரீகளுக்கு வசியமாகும்
ஆகாகா மிருகவசீ கரமுமாகும்
தள்ளியே நில்லென்று சொல்வாருண்டோ
சகலவசீ கரமாகுந் தாரணிக்கே

குளிகை.

தாரணி வேரொடு தாளிப்பனைவேர்
நாரணன் வேரொடு நலமிம்மூன்றும்
கோரமில் லாமற் கூட்டிச்சமனாய்
ஆரல நீரா லரைத்துக்குளிகைசெய்

குளிகை தலைகொள் குத்தே ருது
பழிபடும்போரிற் படாது குண்டுகள்
ஒளிவிட் டெரிந்த உயர்பாண மேறுது
அழிவுரா திந்த அதிசயக் குளிகையே.

தாயத்து.

அதிசயம் பச்சை யோந்தி யிடக்கை
அதினுட காலும் அன்பாகச் சேர்த்து
நிதிவெள்ளி யான நிறைசிமி ழடைத்துக்
கெதிபெற வாயிற் கிடைத்திநீ கேளே

கீழே நீறிற் கிடந்து மிதக்கினும்
கீழே விரித்துக் கிடக்கினும் பயமில்லை
காளே தனலில் நடந்தாற் சுடாது
ஆளே கைக்கொள் அம்புவி தனிலே

### சாயாவிருக்ஷக் கற்பம்—நொண்டிச் சிந்து

சாயாத விருக்ஷமப்பா கற்பமித
தனக்கடை யாளமது சொல்லக்கேளு
மாயா மரம்வெளுப்பாம் எட்டி
மரத்திலை போலிருக்கும் வகையறிவாய்
காய்தனக் கடையாளம் சொல்லி
கண்திறவா நாய்க்குட்டி போலிருக்கும்
வாய்மையஸ்த மானம்வரைக்கும் அந்
மரநிழ லொருபோதுஞ் சாயாது

பட்டையினில் வெட்டிவிட்டால் வெட்டுவாய
பளிச்சென்று தெரியாது யிந்தமரத்தில்
திட்டமா யுச்சிநேரம் பார்த்தால்
தெய்வகன்னி மார்கள்வந்து விளையாடுவார்
சிறுபெண்கள் போலத்தோன்றும் கண்ணுக்குத்
தெரியுமந்த மரத்தின் பேர்கேளு
கருணையாய்த் தன்நிழலைக் காத்தானென்று
காரணப் பேர்களு மதற்குமுண்டு

அந்தமரப் பாலுழக்கு எடுத்து
அன்பாக வேயதனைத் தென்பாகக்கொள்
விந்தை யுடன்மயக்கம் போல
மேல்மூர்ச்சை யாகுமிதினாலே
குடித்தபின் மூன்றேமுக்கால் நாழிகை
கொடிய மூர்ச்சைகொண்டு தான்கிடப்பான்
படிமீது தெளிந்தபின்பு என்றும்
பதினாறு வயததுபோலாவான்

காம ராஜனைப்போல அழகுண்டு
கட்டாக வேபெருகி யிருப்பான்காண்
சேம முடனுயிரமாம் வயது
சிறப்பாக வேயிருப்பா னுறப்பாகவே
அம்மரத்தி லேயிருக்கும் மிக
அருமையாய்த் தேவகன்னி யிரண்டுபேரும்
செம்மையாய்த் தொண்டுமுதல் பணிவிடை
செய்யவரு வாரவர்க்கு இணங்காதே.

நீதான் நினைத்தாக்கால் தினமும்
நெறியொடு சோறுகறி பழமும் வரும்
நாதாக்கள் தான்வருவார் அவரை
நன்மை யுடனேகண்டு தெண்டனிடு
கூட்டியே தான்போயி அந்தக்
குகைக்குள் ளிருக்கிறதோர் சித்தருடன்
நாட்டிக மாகவேதான் உனக்குத்
தானுப சாரங்களுஞ் செய்திடுவார்

மத்தது சொல்லமுடியா கண்டதை
வளமாக விண்டுநீ சொல்லாதே
மெத்த மகிழ்ச்சியது பெற்று
விருதாவாய்ப் பூமியிற் றிரியாதே
அந்த மரத்தின் பாலே ரசம்விட்டு
அங்கையில் மத்திக்கக் குளிகையதாம்
வந்தகுளிகைதனை வாயிலிட
வாய்வேக மனோவேகம் உண்டாகும்

உதிரரோம வேங்கைமரக் கற்பம்.

வேங்கையின் கற்பமப்பா பெரியோர்கள்
விரும்பியே மரத்தோர மாயிருந்து
பாங்குடன் பட்டை வெட்டினால் உதிரம்
பாய்ந்துமே தாரைதாரை யாய்வருங்காண்
உத்தம னேயிதற்குப் பேர்தான்
உம்பரோம வேங்கையென் றும் பின்னுமிந்தச்
சித்த ரோமசனென் றும் பேராகும்
சிறப்பா யிம்மரத்தின்வேர் வெட்டிவந்து

அரைத்துச் சந்தணக்கல்லிலே சம்பழத்
தளவாய்ப் பாலிற்கலக்கி மண்டலங்கொள்ள
நரைமாறி வயதாயிரம் இருப்பான்
ரத்தவேங்கை யின்மரத்தின் பாலதனால்
நெறிலிங்கம் மத்திச்சுக்கை யிட்டு
நேருமிக் காந்தத்தில் மெழுகாகும்
உருகின மெழுகுவெள்ளி இருபதுக்
கொன்று கொடுத்திட மாத்தாறு

அந்தரோமன் பொன்னெடுத்துச் சிரசில்
அன்பான நகைபோல வேபொதிய
இந்தப்பொன் தலையிலிருக்க வெட்டுக்குத்து
ஏறாது அம்புகுண்டும் பாயாதப்பா
சோரரும் கிடையாது எவ்விதச்
சுருக்கான விக்கினங்கள் வாராது
சாரமுடன் பூதகணங்கள் அவனிடந்
தலையுமெடுக்காது ஒடுங்கிவிடும்

## கருநெல்லிக் கற்பம்.

தடையில்லாக் கருநெல்லி மரக்கற்பம்
தான்சொல்லுகிறேனதைத் தெரிந்துகொள்வாய்
அடையாளம் நெல்லிமரம்போ லிருக்கும்
அதின்மரம் பூவுங்காயுங் கருத்திருக்கும்
இதுதான் கருநெல்லி தானிது
எங்குங்கிடை யாமலோ ரிடத்திற்கண்டேன்
சதுர கிரிதனிலே மகாலிங்கந்
தானிருக்கு மிடத்தோரம் உண்டுமப்பா

அந்த மரத்தினிற்போய் மூலமந்திரம்
ஆயிரத் தெட்டுருப் போட்டுநீதான்
விந்தை தேங்காய் பழத்துடனே தூபதீபம்
மேன்மைபெறக் கொடுத்து ஆண்மையுடனே
பட்டையை வெட்டிநீயும் யெடுத்துப்
பாரிலுள்ளோர்களுக்குத் தெரியாமல்
திட்ட முடனெடுத்துக் கற்பமாய்த்
தின்றுவர மண்டலந்தான் தேகசித்தியாம்,

கோதையும் மென்று விழுங்கு இமை
கொட்டி விழிக்குமுன்னே காயசித்தியாம்
வேதையும் முடியுமப்பா வயது
மிகப்பதி னாறாய்த் தெரியுமப்பா
அவன்தேகம் மாந்தளிர்போற் சிவந்து
அதிக மானகாந்தி யுண்டாகும்
தவஉடம் பிதுதானே அவனுக்குத்
தானாயிரம் யானைப் பெலமுமுண்டாம்

வேண்டியே கிம்புருடர் கின்னரர்வந்து
வியப்பாகத் தேடியே வருவார்கள்
ஆண்டவ னிவன்போலே சித்தி
யடைந்திருப் பானிந்தப் பூதலத்தில்
அந்த பிலேச்சாற்றில் இரும்பை
அடைவுடன் காய்ச்சித் தோய்த்திடவே
விந்தையாம் பொன்னாகும் இன்னமதின்
வேடிக்கை சொல்ல யென்றால் முடியாது.

கருநெல்லிக் கற்பமிது சொல்லக்
காணு மதிசயங்கள் மெத்தவுண்டு
பெருமை யதின்விபரம் பேசப்
பெரியோ ரறிவார்மற் றோரறியார்

விருத்தம்.

கூகைக்கண் ணோடு கூகையின் பித்தும்
பாகமாய்ப் புத்துத்தேனி லுரைத்து
ரேகித்துக் கண்ணி லிடப்பா தாளம்
ஏகமாய்த் தெரியு மிந்தஞ்சனமே

அஞ்சனத்தயிலக் கற்பம்.

அஞ்சன மாகுஞ் சிறுகீரை வேரும்
மஞ்சும் உடும்பின் நெய்விட் டரைத்துக்
கஞ்சக் கலசத் தப்பிக் கதிரில்வை
மிஞ்சவே பார்க்க விழுமித் தயிலமே

தயிலங்கண் புருவம் நெற்றியிற் போட
ஒயிலாய்ப் பாதாளந் தோன்றுந் தயிலம்
மயமான கற்பம் வகையின்னதென்று
சயமாஞ் செங்கொடிவேலி மகிமையே

செங்கொடிவேலிக் கற்பம்.

மகிமை கொடிவேலி வாங்கும்பொழுது
அகம்வலுப் படவே அங்கனி யாசமாய்ச்
சுகதேக மாகச் சீரத்தைச் சுத்திசெய்
செகரூல் திரமாய்ச் சிவப்புச் சீலையே

சேலைதிடமாய் ஒங்காளி யென்று
வாலைக்குப்பூசை வளமாய்ச் செய்து
வேலைதான் வாங்கும் பொழுதினில் மந்திரம்
காலையிற் சத்தியின் மந்திரஞ் செபித்தே

ஓம்மந்திர சத்தி இரியும் இந்திரசத்தி
ஆம் ஆதித்தசத்தி ஆலவாய்ச் சத்தி
ஓம்- மந்திரமாய் ஓங்கிடச் சுவாஹா
ஆம்-மந்திரமது அறிவாய் திரமே

திரமா மூலிகை மந்திரஞ் செபித்துப்
பரமாய்ப் பிடுங்கிப் பொடித்துப் பசுநெய்யில்
வரமாகத்தேனும் வழியாய்ச் சேர்த்துத்
தரமா யுனக்குப் பொருந்தும் நாளிலே

நாளினிற் றானே கற்பம் நன்றாக
வாளிதென் றெண்ணி வடமுகம் நோக்கி
ஊழியிருக்க ஓம் நமா வென்று
பாழித சறுக்கரை தன்னிற் கலந்துகொள்

கொள்ளவே துட்டக் குட்டமுந் தீரும்
தெள்ளிடும் அஞ்சு நாட்கொள்ளச் சித்தியே
வள்ளலே ஆறுநாட் கொள்ள வகாரம்
மெள்ளவே யொன்பது நாட்கொள மேன்மையே

மேன்மையதான கற்ப மிதுதான்
பான்மை யுடனே பத்தியிற் சிறப்பான்
கோன்மையான குணப்பெருங் கொண்டல்
மேன்மையான வியன்சத் தியனே

வேறு விருத்தம்.

சத்தியாம் சித்தியாகும் தரணியில் பத்து நாட்கொள்
முத்தியாஞ் சாஸ்தி ரத்தின் சத்தியு முண்டா மப்பா
பத்தியாய் மாதங் கொள்ளப் பார்வய தாயிரந்தான்
உத்தம மூன்றுமாதம் முடிவரத் தின்றாற் கேளே

கேளப்பா கெவுனம் பாய்வான் கிருபையா யாறுதிங்கள்
நீளப்பா தின்றாயாகில் நினைத்ததோ ரிடத்திற் போவான்
வாளப்பா வல்லவன்காண் மஹா அபமிருத்தும் வெல்வான்
நாளப்பா நீரின் மேலும் நெருப்பிலும் நடப்பான் நன்றே

நன்றிசெய் வேலிகற்பம் நயமுடன் கொள்ளுமுன்பு
என்றிசைப் புளியு முப்பும் எண்ணைசுண் ணாம்புந்தள்ளு
சென்றிடும் பத்தியந்தா னிதுகளைத் தீர்த்தபின்பு
நன்றிகொள் வேலிகற்பம் நயமுடன் கொள்ளச்சித்தே

சித்தியாம் வேதை கண்டால் செய்தது சரிதானப்பா
முத்தியாம் சித்துக்கண்டால் முடிந்தது யோகமப்பா
பத்தியாம் சுடரைக்கண்டால் பவமது கிடையாதப்பா
சத்தியைப் பூசைசெய்த சத்தியம் வேதைதானே

வேறு விருத்தம்.

வேதையென்ற விரைப்பாகற் றயிலங்கொண்டு
விருப்பமுடன் துருசதற்குப் பூசிப்பின்பு
ஆதித்தின் பார்வைபடப் பதினேழாநாள்
அப்பனே சுண்ணாம்பாங் காரமீறும்
வாதிகளே பின்னுங்கேள் ரவியிற்கூட்டில்
வலுவாக நாலாநாள் கட்டிப்போகும்
நீதியாய்ப் பதின்மூன்று நாளேசென்றால்
நிச்சயமாய்த் துருசுகுரு சுண்ணந்தானே

சோதி விருக்ஷக் கற்பம்.

தானவனுஞ் சோதியென்ற விருக்ஷகற்பம்
தயவாக அடையாளஞ் சொல்லக்கேளு
ஏனடா ஊமத்தை யிலைபோலப்பா
இருக்குமே வெட்டினால் பாலேபாயும்
ஞானமுடன் ராத்திரியின் நிலவுபோலே
நன்றாகக் கொழுந்துகளில் பிரகாசிக்கும்
வானவர்க்கும் சித்தருக்கும் பகலிற் றோற்றும்
மற்றவர்க்குப் பகல்தெரியா மந்திரந்தானே

மந்திரந்தான் சொல்லுகிறேன் நன்றாய்க் கேளு
வகையுடனே அரியும் இரியும் கிலியும்
மந்திரந்தா னிதுதானும் சுமுகாய நமாவென்றே
வாகாக நினைத்துவா நமாஹா வென்று

மந்திரந்தா னுருச்செபித்து மூன்றுநிற நூலால்
வகையாகக் காப்பதுவுங் கட்டிக்கொண்டு
மந்திரந்தான் சொல்லிநமஸ் கரித்துநீயும்
வாகுடனே போயிப்பின் மறுநாள் வந்தே

மறுநாளில் வந்தவுடன் மரத்தைக்கண்டு
வாகான கணபதிக்குப் பூசைசெய்யத்
தருவதனிற் பழந்தேங்காய் வைத்துடைத்துத்
தயவாக நிவேதனந்தாம் பூலம்வைத்து
உறுதியாய் மரத்தடியிற் பொங்கலிட்டு
உத்தமனே வயிரவர்க்குப் பூசைசெய்து
அறிவுடனே அம்மரத்தை நமஸ்கரித்து
அன்பாகச் சமூலமது வாங்கிக் கொள்ளே

வாங்கியே சமூலமதைக் குடத்திலிட்டு
வண்மையாத் தயிலமதா யிறக்கிக் கொண்டு
பாங்குடனே யிரும்புப்பாத் திரத்தில் வைத்துப்
பண்பாக வண்டுகட்டி வைத்தபின்பு
தாங்கியே யிருபதுநாள் நெற்குள் வைத்துச்
சரியான நாட்சென்ற பின்னெடுத்து
வாங்கப்பா அதன்பின்பு தயிலந்தன்னை
மருந்துமொரு பாத்திரத்தில் வைத்திடாயே

வையகத்தில் தயிலமது கொள்ளும்போது
மனதாரப் படுபட்சி யில்லாநாளில்
ஐங்கரனை மறவாமல் முதல்நாள் தானே
அப்பனே ஒருகளஞ்சி தயிலங்கொள்வாய்
செய்தமொரு விரண்டாநாள் களஞ்சிரெண்டு
சேர்ந்தமொரு மூன்றுநாள் களஞ்சிமூன்று
உய்யமொரு நாலாநாள் களஞ்சிநாலு
உத்தமனே அஞ்சாநா ளதுவாய்க் கொள்ளே

கொள்ளவே ஆறுநாள் களஞ்சியாறு
கூட்டப்பா ரசங்களஞ்சி கூட்டிக்கொண்டு
கொள்ளப்பா ஆறுநாள் மூர்ச்சை போகும்
கூர்ந்துநீ யப்போதி லரைக்ஷணத்தில்
மெள்ளவே தான்கடத்தி யிரண்டுகாவில்
விரலான பெருவிரலிற் சீலையாலே
துள்ளாமற் கூட்டியே செவ்வையாகச்
சுகமாகக் கிடத்திவைத்துப் பின்னுங்கேளே

கேளப்பா கையிரண்டும் ரெண்டு காலிற்
கிடத்தியே உச்சிநெஞ்சு செவிகண்ணிற்றான்
வேளப்பா கதலிபழம் நெய்யுஞ் சேர்த்து
விருப்புமுட னதையேதான் பஞ்சிற்றோய்த்து
தாளப்பா சொன்னதொரு தலங்களெல்லாம்
தளமாக யிட்டுவைப்பாய் தவறுமற்றான்
கேளப்பா வாயினிலே பாலொழுகிக்
கிலேசம்விடு யேழாநாள் கண்விழிப்பான்

விழித்தவுடன் எடுத்தனைத்து நன்றாய்ச் சாத்தி
மீண்டுமவர் சுகம்பிறக்கு மளவுமட்டும்
பழிப்பில்லாப் பனங்கருப்புக் கட்டியோடு
பாங்காகச் சோறுக்கி உண்பாய் பின்பு
ஒழிப்பாகச் சொல்லவில்லை யிந்தக்கற்பம்
உற்பனமா யெக்காலுஞ் சாகமாட்டான்
சவியாம விக்கற்பந் தன்னையுண்டு
சதாசிவன்போற் சாவில்லா திருந்திடாயே

சாவில்லை யென்பதல்லாற் பின்னுங்கேளு
சாரத்தி உற்றஉமி நீருஞ்சிறுநீர்
மேவியதினலேமலை யுருகவேதை
வேதாந்த நவலோக மெல்லாம் வேதை
ஆவியென்ற தவனமல மூத்திரத்தை
யாரொருத்தர் புசித்தாலும் பின்னுங்கேளு
மேவியதோ ரவனுமந்தப் படியேயாவான்
விமலனைத்தா னிவனெனவே விள்ளுவேனே

விள்ளுவே னிதன்பாலைக் கலையிலேதான்
விருப்பமுடன் பதினைந்து நாளுமூட்டி
வள்ளலே ரவிமுகத்தி லுலர்த்திக்கொண்டு
வையப்பா வராகநெய் புத்தோட்டிற்றான்
அள்ளலே மைபண்ணிப் பஞ்சலோகம்
அதனிலிட நூற்றெட்டு மாத்துமாகும்
உள்ளதொரு மூலிகையின் தோலுலர்த்தி
உற்றபொடி யொருநாழி யெடுத்துக்கொள்ளே

வேறு விருத்தம்.

கொள்ளுவாய் நெய்யிற் குறிப்பாய்நெய் நாழியிலே
எள்ளளவாய்ப் பாணிவிட்டு யிருபத் தொருநாளிலே
வள்ளலே ரவியிலேதான் வைத்துட னெடுத்துக் கொண்டே
விள்ளுவாய் நீயொருமா விடையதாய் நித்தமீதே

இதுகொண்டு பின்புட னுவின்பா லருந்து
அதிசய முப்பது நாட்கொள்வா யாகில்
திதியுள்ள அட்டமா சித்துகள் செய்திடும்
கதியுள மருந்து கற்பமாமிதே

உப்புக்கட்டு.

கற்பமிது தன்னைக் கதிப்புடன் கண்டால்
பொற்கிரி வாழும் போகர்தா னப்பா
உற்பனவேதை உயர்கின்ற தெவ்விடம்
நற்கல் லுப்பு நாட்டுநில வுப்பே

உப்பென் றறியா ருசியிலா மாந்தர்
உப்புகல் லுப்பு யிதுக்குரை கேளு
அப்பு சமுத்திர மானதின் கூறு
உப்புறைந் தல்லோ கல்லுப்பதாமே

கல்லுப்பு தான கறியுப்பைக் கட்டவே
சொல்லக்கே ளப்பா சுகசிற் றழரி
வெல்லு மிதுதான் வியப்புடன் சித்தி
மல்லுக்கட் டாதே வகையிது சொன்னேன்

வகையினிக்கேளு மானிலத்தேதான்
தகையிலாச் சத்திதனக்குமே இப்போ
பகையறி யாரறு பத்துநாள் மட்டும்
தொகையுட னுனக்குச் சொல்வேனட் டாங்கமே

அட்டாங்க சத்தி ஆதிநில வுப்பாம்
அட்டாங்க சத்தி யப்பாரி லுப்பாம்
அட்டாங்க சத்தி யாகிய பூரணம்
அட்டாங்க சத்தி ஆதித்த னாலேயே

ஆதித்த னாலே யதுவெள்ளை யாச்சுது
சோதியி னாலே சொரூபப் பிறப்பாம்
பாதிப் பணியிற் பிறக்கும்பா ருப்பு
மேதினி தன்னில் விளைவது தானே

தானவளான சத்தியீ தப்பா
ஏனமாய்க் கைமுறை பிப்பத்தி நாதம்
வான மனத்தை வலுவாகக் கட்டும்
நானுங் கொங் கணரும் நயமுடன் கண்டோம்

உடன்கண்ட செய்தியை யுரைத்தேன் முன்னுகை
குடவரை விட்டுக் குளிகையால் ராஜன்
சடமது நுழைந்து சத்திரியன் மனைவியை
திடமுடன் கூடிச் சேர்ந்திடும் நாளில்

வகையுட னென்னிடம் வாங்கியே யொளித்த
குகைதனில் நுழைந்து குருநா லான
தகமையா யுள்ளவிச் சாஸ்திரந் தன்னைப்
பகமை யில்லாமற் பார்த்தெடுத் தேனே

எடுத்துப் புவியெலா மெங்கும் விதைத்தேன்
எடுத்த கருக்க ளெதுவுந் தப்பில்லை
விடுத்துநீ வேதை விளங்குமிப்போது
தொடுத்ததோர் கற்பம் தோன்றுவ தெல்லாம்

எல்லாந்தான் சித்தியியல்பான வேதை
எல்லாக் குருவு மெடுத்துரைத்தேனுன்
நல்லா விரையின் தயிலத்துருசும்
எல்லாஞ் சுண்ண யிடைதனிற் கேளே

கேளப்பா தாளகங் கிருபை யுடனே
நாளப்பா வெயிலில் நல்லதோர் சுண்ணம்
வாளுமனோசிலே வையொன் பதுநாள்
வேளப்பா கெந்தி வெளுக்கும்பதி னேழே

பதினேழா நாள்ப் பற்மதாகும்
பதிவான வங்கத்திற் பத்தரை மாத்தாம்
விதிதாளகந்தான் வெள்ளையை வெள்ளியில்
நிதியா யொன்பது மாற்றுச்சரி யாமே

சரிசிலை பற்பம் தாம்பிரந் தன்னிற்
சரிவய தெட்டரை தப்பாது கேளு
சரியுள வகைகள் தான்களஞ்சிக்குச்
சரியிடை கூட்டி ரசவேதை கூட்டே

கூட்டிடும் வேதையிற் கோரோ சனையும்
பூட்டிடும் புளுகது கூட்டிடு நீயும்
போட்டிட வேதை பொய்யா தப்பா
கூட்டிடு கோசமும் பீசமுமாமே

அமிது கோரோ சனைவன்னி மீறும்
நாமது சொன்னோம் நலியாமல் வேதைபார்
பூமியிலுள்ளே புலம்பும் வாதிகாள்
சோம சுரோணிதஞ் செந்தூரஞ் சொல்லே

வேறு விருத்தம்.

சொல்லென்ற கோச பீசம் துணிவுட னறியமாட்டார்
வல்லபக் கொங்கணர்தான் வருசட்டை நாதர்தாமும்
நல்லதோர் மூலரோடு நந்திபு மொழிந்த தல்லால்
வெல்லென்ற கோசபீசம் விளம்பாமல் மறைத்திட்டாரே

மறைத்ததோர் கோசபீசம் வருபூரம் மெழுகதாகும்
உறைப்புட னிதுகூடாட்டால் உற்றதோர் வேதைகாணேன்
மறைப்புடன் வேதைகாண்பான் வர்ணங்க ளேறலாகும்
குறைபட்ட மனிதர்போலக் கூனியே திரியவேணும்

கூனுடன் திரிவதேது கோசமும் பீசமுந்தான்
ஆனதோர் வன்னங்கோரோ சனைமேலே யாட்டிக் கூட்டித்
தேனினி லாட்டி நன்றாய்ச் சிறுபயறளவிற் செய்து
தானது நிழலுலர்த்தித் தயவுடன் வேதை பாரே

பாரப்பா நிலவுப் பாலே பார்கரி யுப்பைக்கட்டும்
பாரப்பா யிரவி விந்து பண்புடன் சித்திசெய்வாய்
பாரப்பா காரசாரம் பகலவன் பார்க்கச் சுண்ணம்
பாரப்பா கருக்களெல்லாம் பராபரங் குருவா மென்றார்

குருபோக நாதரைத்தான் கூறுடன் பூசைசெய்து
குருமூலர் சட்டைநாதர் கொங்கணர் காலாங்கிபாதம்
குருவென்று பூசைசெய்து கூறுமிச் சுவடிவைத்துக்
குருவென்று பதம்பணிந்தோர் கூறுடன் வேதை காண்பார்

ஆமப்பா யுத்திசொன்னே னழியுத்தி சொல்லவில்லை
ஆமப்பா வேதைகண்டால் கற்பத்தை யதன்பின் கொள்ளு
ஆமப்பா சித்தியாகும் அன்புடன் செய்துபாரு
ஆமப்பா குருவைக்காணு அன்புடன் சொல்லினேனே

## நொண்டிச் சிந்து—கெந்தகத் தைலம்.

அந்தமுள்ள கெந்தகத்தின்
அறைகிறேன் திருமூலர் கொங்கணர் மெய்க்க தயிலம்
மாசில்லாக் கெந்தகந்தான்
வாங்கியே ஐந்துபலம் கல்வத்திலிட்டு இதனை
சாரமுடன் வீரமுந்தான்
சமத்தான வெடியுப்புப் பலமரையும் இருகாசு
தாளகம் லிங்கமுடன்
சமந்தாக மூன்றுகா சிடைகூட்டி. இரண்டும்

அரைப்பா யாவின் நெய்யில் கொண்டு
அருமையான வெள்ளைச் சீலையிலூட்டி
மேற்புடம் கீழ்ப்புடமாய் அதனை
மெத்தவே பாகமுடன் வைத்திடவே
தயில மிறங்குமப்பா அதைச்
சந்தோஷமா யெடுத்து விந்தையுடனே
ஒயிலாய்ப் பீங்காணில் வைத்து
உண்மை யுடனெடுத்து நன்மை பெறவே

பணவிடை சர்க்கரையிலும் கற்கண்டிலும்
பண்புடன் காலைமாலை உண்டுவர
தீரும் வியாதிசொல்வேன் பின்னுங்
தீராத சயரோகம் ஈளைகுன்மம்
குஷ்ட மொடு கொடுமை வெள்ளை
கொடிதான மேகமொடு வாயுவாதம்
ஒருமண்டலங் கொளவே தீரும்
உத்தம வாதியருக் கிந்தமுறை

வாய்த்துதென் றுலதுவும் ராஜ
வயித்திய னென்றே பேரும் பெறுவான்
சத்தியமாய்ப் பத்தியமில்லை இந்தமுறை
சண்டாளர்க் கொருபோதுங் கிட்டாது
கெற்பசித் துடனே தான் ஆகாய
கெவுனமும் பாய்வான் கண்ணின்முன்னே
மாசில்லாத் தயிலமிது சித்தர்
மறைப்பாகப் பாடிவைத்தார் தெரியாமலே

வெளியாகச் சொல்லிவிட்டேன் இந்த
மேதினியி லுள்ளவருங் கியாதிபெறவே
தெளிவொடு தெரிந்து கொண்டு தயிலஞ்
செய்துகொள்வாய் மாந்த ருய்துகொள்ளவே
என்குரு போகநாதர் பாதம்
இனிமை யுடன்பணிந்து கனிவுபெற்று
தன்மை யுடனே தான் இந்தச்
சாஸ்திரத்தி லுற்றபடி நேர்த்தியுடனே

கைபாகத் துடன் செய்துக் கொண்டு
கருத்தாக வாதமுறை பொருத்தமுடன்
செய்பாகந் தன்னுடனே எதுவுந்
திர்க்கமுடன் செய்துகொண்டேன் பாக்கியமென்றே
கற்ப முறைகளையும் வகையுடன்
கண்டுதெரிந்து அதைக் கொண்டாக்கால்
விற்பன னிவன்றானே என்றும்
வீற்றிருப்பான் சடமழியாமல்

புத்திமா னுனக்கால் அவனும்
பொருத்தமாய்ச் செய்துகொள்வான் திருத்தமுடன்
பத்தியாய்ச் செய்திடுவான் இந்தப்
பாரினிற் சாகாத வரம்பெறுவான்
காலாங்கி நாதருந்தான் வேதைசெய்யக்
கருத்துடன் தயிலங்கள் தான்முடித்து
கோலா கலமாக யாருங்
குறிப்பிட் டறியாமல் சதுரகிரி

மத்தியில் தயிலக்கிணறு வைத்து
மகாபெரும் பாறைக்கல் லால்மூடி
சித்தர்வந் தாற்கொடென்று கருப்பனை
சீராகக் காவல் வைத்தார் நேராக
காவல் பதனமென்று கருப்பனுக்கு
கட்டளைக ளிட்டுவிட்டார் திட்டமுடனே
தேவையுடனேதான் சித்தர்
தேடிவந்தாற் கிட்டுமப்பா தெரிவாய் முற்றே

கருவூரார் வாதகாவியம் - 700


முற்றிற்று.

(*)